

आ शैलादुदयात्तथास्तगिरितो भास्वद्यशोरश्मिभिः
व्याप्तं विश्वमनन्धकारमभवद्यस्यस्वशिष्यैरिदम् ।
आरात् ज्ञानगभस्तिभिः प्रतिहतश्चन्द्रायते भास्करः
तस्मै शंकरभानवे तनुमनोवाग्भि र्नमः स्यात्सदा ॥

Salutations with body, mind and speech to the glorious Sun that is Sri Sankara struck back by the lusture of whose knowledge the splendour of the solar orb became dim like the moon, and the effulgent renown of whose disciples enveloped all the countries from the Far East to the Far West and dispelled the darkness of ignorance from every region.

— *Sri Sureshvaracharya*



# ஸ்ரீ ஜகத்குரு அருட்புகழ்

அருட்கவி சேதுராமனார்

மேதகுநல் விழுப்புரத்தில் அவதரித்த வள்ளால் !
மெய்யுறச்சந் திரமவுலீ சரைத்தினமும் பூஜை
ஆதரவோ டேசெய்திடும் அருமந்த அண்ணால் !
அம்பிகையாந் திரிபுரசுந் தரியைவழி படுவாய் !

வேதமெலாம் விளக்கவல்ல மெய்ஞ்ஞான விளக்கே !
வேதியர்கள் கொழுகொம்பே ! விளங்கிடுமத் துவித
சாதகனே ! காமாட்சி மகிழ்காம கோடிச்
சங்கரா சார்யகுரு ! ஜகத்குருவே ! போற்றி.

காம கோடிநற் பீடத்தை ஆளுங்
காசி னிக்கொரு குருவென வந்தோய் !
நேம மோடுசந் திரமவு லீசர்
நெடிய மேருவின் பூஜைமெ லாஞ்செய்

ஏம மார்பெரு கிதயங்கொள் நல்லோய் !
இலகுஞ் சந்திர சேகரேந் திரரென்
நாம மேவிய ஸரஸ்வதியே ! நின்
நாட்டம் எம்மைநற் கதிக்கழைத்திடுமே

இங்கரன் இவனோ என்ன ஏவரும் வியப்ப மேவச்
சங்கரன் நிகர்செம் மேனிச் சகத்குரு காம கோடிச்
சங்கரர்க் கொருநூற் றெட்டொண் தமிழ்க்கவி
மாலை சாத்த
ஐங்கரர் கமலத் தாளை அஞ்சலித் தவளை வேட்பாம்.







On the occasion of His Holiness' 77th Jayanthi, we offer our humble prayers to Goddess KAMAKSHI for longevity to the JAGADGURU and for His continued spiritual guidance to humanity at large.

SAMAJAM



# ஸ்ரீ ஜகத் குரு

ஸ்ரீ வத்ஸ ஸோமதேவ சர்மா.

1. தற்சமயம் ஜகத்குரு பெரியவாள் என்ற சொற்கள் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஆச்சாரியர்களையே குறிக்கும். அவர்கள் சாஸ்திர முறை வழுவாமல் தாம் அநுஷ்டிப்பதுடன் சிஷ்யர்களையும் அநுஷ்டிக்கும்படி கூறுகின்றார்கள். அதைப் பூர்ணமாகக் கைப்பற்றி அநுஷ்டிக்க முடியாமல் இருப்பது சிஷ்யர்களின் குறையாகும். ஆசார்ய லட்சணம் பரிபூர்ணமாக நிறைந்து மற்றவர்களுக்கும் வழிகாட்டியாய் உள்ளவர் நமது பரமாச்சாரியர். ஒருவர், தன் பெயர், குருவின் பெயர், அதி க்ருபணனின் பெயர், மூத்த புதல்வன் பெயர், மனைவியின் பெயர், இவைகளை நன்மையை விரும்புபவனுல் கூறக்கூடாது என்பது சாஸ்த்ரம். அதன்படி தம் வாயினுல் தம் குரு, பரம குரு, பரமேஷ்டி குரு ஆதி குரு இவர்களின் பெயரைக் கூறுவதில்லை நமது பரமாசார்யர் என்பதை நெருங்கிப் பழகியவர்களில் ஒரு சிலரே அறிவர். அவர்களின் சென்னை விஜயத்தில் கச்சலேசுவரர் அக்கிரகாரத்தில் சம்ஸ்கிருதத்தில் ஒரு சுவாகத பத்திரிகை படித்தளித்தேன். அதன் தலைப்பில் அவர்களது பெயரைக் கூருமல் ஸ்ரீ காமகோடி பீடாதிபதி என்றே கூறி, அதே போல் அடியில் என் பெயரையும் கூருமல் குருவின் பாத தூளி என்றே குறித்திருந்தேன். இதைப் படித்து முடித்தவுடன் யாரிடமோ பேசிக் கொண்டிருந்த ஆச்சார்யர் இது ஒன்றுதான் ஆத்ம நாம, குரு நாம என்றபடி தன் பெயரையும் குரு பெயரையும் கூருத வரவேற்பு பத்திகை என்று கூறி அஷ்டாவதான சக்தியைக் காட்டினுர்கள்.

ஆதி குருவைப் பற்றி அவர்கள் கூற நேர்ந்த போதெல்லாம் மனம் குளிர, வாய் நிறைய பகவத் பாதர்கள் என்றே கூறுவதைக் கேட்கலாம்.

## ஸ்ரீ குருவின் நித்திய பூஜை

லோக க்ஷேமத்திற்காகச் சந்திர மௌளீஶ்வர பூஜை விரிவாக நடப்பதை நாம் காண்கிறேம். அது முடிந்தபின் அன்றன்றும் ஆத்மார்த்த பூஜையாக ஆச்சாரியர் பாதுகையைப் பூஜிப்பதும்

ஆச்சாரியார் கிரந்தங்களைச் சிறிதுபாராயணம் செய்வதும் அவர்களது ஆச்சாரிய பக்தியைக் காட்டும் அருஞ்செயல்களாம். அன்றியும் சங்கர ஜயந்தியை அவர்கள் கொண்டாடும் முறை மிக ஆச்சரியமானது. சங்கர ஜயந்தி உற்சவத்தில் ஆச்சார்ய உருவை நன்கு அர்ச்சித்து அலங்கரித்து யானை அல்லது விமானத்தில் ஏற்றி வீதிவலம் வரும்போது, தாம் அதன் அருகே வெறுங்காலால் நடந்து சிஷ்யனாக நடந்துவரும் காட்சி பாக்கியசாலிக்கே பார்க்கக் கிடைக்கும். ஒவ்வொரு நகரத்திலும் வீதியிலும் கிராமத்திலும் ஒவ்வொரு வீட்டிலும் கூட ஜயந்தி நடைபெறுவது அவர்களது அருளாலே தான். அதற்கேற்ற வண்ணம் ஜயந்தி நடக்கும் இடங்களுக்கு யெல்லாம் பிரசாதம் அனுப்பி விசேஷமான ஆதி ஆச்சாரியர் பிம்பம் அமைத்த வெள்ளிக் காசு, பொற்காசுகளை அனுப்பிவருவதும் ஒப்பு உயர்வற்ற இவர்களது ஆச்சாரிய பக்திக்கு அளவு கோல் அன்றோ?

இவர்களது அருளால் நாளுக்குநாள் நாடெல்லாம் நகரமெல்லாம், ஊரெல்லாம், வீதியெல்லாம் ஜயந்தி உற்சவம் கொண்டாடுவது ஆண்டுதோறும் அதிகமாகி வருகின்றது.

## ஸ்ரீ காமகோடி பீடாதிபரின் பூஜை

முக்கரணங்களும் ஒருமைப்பட்டுப் பூஜை செய்யும் பெருமை பெற்றவர் நாம் அறிந்த மட்டில் ஸ்ரீ ஜகத்குரு ஒருவரேயாவர். 'தாம் நற்கருமாவை ஆசரித்துக் காட்டுபவர் ஆசாரியர்' என்றபடி இப்படித்தான் பூஜை செய்யவேண்டும் என்று மேற்கோள் போல் உபதேசிக்கிறது அந்தப் பூஜை.

பூஜா சங்கல்பம் ஆனபின் சித்திரத்தில் தீட்டப்பட்ட ஆசார்ய உருவைத்தான் நாம் காணலாம். கருணை ததும்பும் கண்கள் நம்மீது விழா. அன்னை திருபுரசுந்தரியின் திருவுருவிலே பதிந்து தோய்ந்துவிடும்; மனம் லயித்துவிடும், பூஜைக்கு வேண்டிய அளவைத்தவிர உடல் அசை



யாது. பல மணிக்கணக்கில் பேச்சில்லை. மற்ற பார்வை இல்லை; கேள்வி இல்லை. நம்மில் சிலரும் பூஜை செய்கிறோம். பட்டணத்தார் பாடலுக்கு இதுதான் உதாரணம். கை உடலைச் சொறியும்; விழி வருகிறவர்களை யெல்லாம் வரவேற்கும்: மனம் பல எண்ணங்களை எண்ணும். அப்பொழுதுகூட, பேசும் நாக்கு, பொய்யும் கூறும். பல முறை காலை மாற்றி உட்காருவோம். தகாத பல விஷயங்களைக் கேட்போம். இப்படிச் செய்யும் பூஜை பூஜையாமோ?

ஸ்ரீ ஜகத்குருவின் மனம் இறைவனிடம் லயிக்கும். வாக்கு முதலிய புலன்கள் அனைத்தும் அம்மாதிரியே மனத்தோடு லயித்துவிடும். உயர்ந்த துறவிக்கு, ஜீவன்முக்தருக்கு, ஞானக் கடலுக்குப் பூஜை வேண்டுமா? நம் பொருட்டன்றோ பூஜை? என்ன பக்தி! என்னே ஈடுபாடு! என்னே ஆசாரம்! என்ன ஏகாக்ர நிலை! முகக்கண்ணை மூடி அகக்கண்ணைச் சிறிது திறப்போம். இந்தப் பூஜா

வைபவத்தில் கலப்போம். அந்த நிமிஷ மல்லவோ நாம் ஜன்ம பலன் எய்திய காலம்?



ஆகாரம் கிட்டாததனால் ஏகாதசி உபவாஸமிருந்தால் பயனுண்டோ? மனத்துக்கு மாற்றத்தை அளிக்கும் காலத்தில் மனம் ஏகாக்ரப்படுவதன்றோ ஏகாக்ரமாகும்? பேச வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படும்பொழுது பேசாமை அல்லவா மௌனம்? சினமுண்டாகும் நிகழ்ச்சி தோன்றும்போது, உண்டாகும் பொறுமையன்றோ பொறுமை! அதிர்வேட்டுப் போன்ற சப்தங்கள் கிளம்பும் போதும் அசையாமல் திரும்பிப் பாராத நிலையன்றோ ஏகாக்ரம்? நித்தியம் இருவேளைகளிலும் அவசரமின்றிப் பல மணி நேரம் அமர்ந்து, சிறிதுகூடச் சிரத்தை குறையாமல் செய்யும் பூஜா வைபத்தை வேறெங்கே காண முடியும்?

பக்தர் கூட்டம் பல வகைக் கருத்துள்ளது. தேள் கொட்டியதுபோல் ஒரு குழந்தை வீரிட்டு அழும். அதை அடக்கும் அன்னையின் குரலும், அதைச் சகிக்காத மற்றோர் சப்தமும் இடிமுழக்கம்போல இருக்கும். பக்தி பரவசத்தால் பாடுவார் சிலர். பாட்டு, சொந்தச் சாகித்தியமாக இருக்கும். இடையிடையே குடும்பப் பேச்சும் கூடிவிடும். இவையெல்லாம் பூஜை செய்யும் குருநாதர் செவியில் நுழையுமோ? பலர் பக்தி பரவசமாகி ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரரின் எழிலில் ஈடுபட்டு மெய்ம்மறந்து நிற்பர்.

### தேசிகனிடம் தாயின் தரிசனம்

புஷ்பமெடுப்பதற்காச் சிறிது திரும்பும் பொழுது பக்தி, கருணை, ஆனந்தம் இவற்றை வர்ஷிக்கும் நேத்திரச் சாயை பக்தர் மீது விழும். அது வெறும் ஆசார்ய விழியல்ல. அன்னையிடம் தோய்ந்துவந்த காமாக்ஷியின் கருணை கடாக்ஷமேயாகும் ஜகஜ்ஜோதியான ஆசார்ய தர்சனமும் திரிபுரஸுந்தரீ ஸமேத சந்திரமௌளீச்வரர் தர்சனமும் தீபாராதனைக் காலத்தில் காண்போம். தீபாராதனம் கையில் இருப்பதால் பூஜை செய்பவர் ஆசார்யர் என்றும். பூஜிக்கப்படுவர் சந்திரமௌளீச்வரர் என்றும் சிறிது வேற்றுமை தோன்றும் ஆனால் அத்வைதத்தைக் காட்டும் காட்சியை அடுத்த நிமிடம் காணலாம்.

ஸ்வாமி ரதத்தைப் பிரதக்ஷிணம் வரும் காட்சியே ஆசார்யர் அன்னை, அன்னையே ஆசார்யர் என்று எண்ணச் செய்யும். பூஜை செய்து எழுந்தவுடன் பஞ்சாக்னி மத்தியிலிருந்து கடுந்தவம் புரிந்துவந்தது போல் ஒரு தேஜஸ், காந்தி, மேனியழகு தோன்றும். அன்னை 'ஸகுங்குமவிலேபநா' குங்கும லேபனமுள்ளவள்; ஆசார்ய சரீரம் காஷாயம் தரித்தது. இக்ஷுவில்லை ஏந்தியவள் ஜகன் மாதா; தண்டத்தை ஏந்தியவர் ஜகத்குரு. அன்ன நடையுடையாள் அன்னை! பிரதக்ஷிண விதிக்கேற்ப அடிமேல் அடிவைத்து நடக்கும் ஆசார்யர் திருவடிகளில் ஹம்ஸ கமனத்தைக் காண்கிறோம்.

ஜகன்மாதா, ஜகன்மோஹினி. அதே ரூபத்தை ஆசார்ய உருவத்தில் காண்கிறோம். பார்க்கும் பக்தரது உள்ளே ஊடுருவிப் பாய்ந்து கண்களைக் கொட்டாமல் காணச் செய்யும் மோஹன சக்தி ஒன்று தனியாக அச்சமயம் தோன்றுகிறது. '**दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयम्**' குரு வடிவத்தில் தேவி தமக்குத் தர்சனம் தந்ததாக ஓர் உபாஸகர் அன்று கூறிச் சென்றார். இன்று அந்தக் காட்சியைப் பாக்கியமுள்ளவர்கள் காண்கிறார்கள்.

2. நம் பரமாசார்யர்கள். பிக்ஷை செய்வது யாதெனப் பக்த சிஷ்யர்கள் அறிந்ததே. வேதம் வகுத்தவண்ணம் ஒரு வேளைதான் பிராணாக்னி ஹோத்ரத்துக்கென வாய் திறப்பார்கள். அதிலும் பல நாட்கள் உபவாச நாட்களாகவே இருக்கும். சந்நியாசிகள் பிக்ஷை ஆனபின்பு அவர்களிடம் துளசிதளத்தை வாங்கிக் கொண்ட பின்பே கிருஹஸ்தன் வைச்வதேவம் செய்யவேண்டும். அப்பொழுது அங்ஙனம் விஷயமறிந்து துளசிதளத்தை வைத்துக் காத்திருப்போர் அங்கு ஓர் அரிய ஆசாரத்தைக் காணலாம். பக்தர் அளித்த துளசியை வாயில் போட்டுக்கொண்டு, உடனே கால் அலம்பி ஆசமனம் செய்து, பிறகு துளசிதளம் தருவார்கள்.

"நீ போஜனம் செய்தபின் காலலம்பி ஆசமனம் செய்" என்று நமக்குப் போதிக்கவில்லையா இது? போஜனம் ஆனபின்பு காலலம்புபவர்கூடப் பலர் ஆசமனம் செய்வதில்லை. அதிலும் கால் அலம்பிய மிகுதி ஜலத்தால் ஆசமனம் செய்யக்கூடாது என்ற ஆசாரத்துக்கு, ஆசார்யர்கள் அனுஷ்டிக்கும் முறை நுட்பமானது. போஜனத்துக்கு முன்னும் பின்னும் **पंचार्द्र**: ஐந்து இடங்களில் ஈரமுள்ளவனாக இருக்க வேண்டும். அன்னமயமானது மனம். ஆபோமயமானது பிராணன். ஆதலால் கால் அலம்புவதும் ஆசமனம் செய்வதும் பிராணசக்தியைப் பலப்படுத்தும்.

ஆசமனம் பகவந்நாமாவை நினைவூட்டுகிறது. ஜலத்துடன் கேசவன் முதலிய பன்னிரண்டு நாமாக்களைக் கூறி அங்கங்களைத் தொடுவது ஆலஸ்யத்தை அகற்றி ஓர் உணர்ச்சியையும் சுறுசுறுப்பையும் தரும். எல்லாவற்றையும் விட இது முன்னோரைப் பாராட்டி நம் நாட்டுப் பண்பாட்டில் ஈடுபட்ட திருப்தியைத் தரும்.

3. ஸ்ரீ பெரும்பூதூர் என்ற திவ்ய தேசம் ஸ்ரீவைஷ்ணவாசாரியரின் அவதார ஸ்தலம். விஷ்ணு கோயிலும், ஸ்ரீராமானுஜருக்கு எனத் தனிப் பெருங்கோயிலும் அங்கு உண்டு. விசிஷ்டாத்வைதிகளின் கோட்டை அது. பெரியவர்களோ அத்வைதி. அங்கு ஒரு நாளல்ல, ஒரு வாரமல்ல, ஒரு பக்ஷமல்ல, ஒரு மாதகாலம் பூஜாகைங்கர்யம் நடந்தது. "குரு: பூஜாஸ்தானம்." ஸ்ரீ வைஷ்ணவர் போட்டி போட்டுக்கொண்டு கைங்கர்யம் செய்தனர். அங்கே தாசில்தாராக இருந்த த்வாரகாநாத ஐயர் தமது தூண்டுதலின்றியே இங்ஙனம் நடப்பதைக் கண்டு பேராச்சரியமடைந்தார்.

கோயில் மரியாதையும் மிகச் சிறப்பாக நடந்தேறியது. பெரியவர்களும் ஆலயம் சென்று ஸ்ரீ பாஷ்யகாரருக்கு ரத்தினங்களால் ஆகிய திருநாமம், பட்டு முதலியவற்றைச் சாத்தினார்கள். அத்வைதாசார்யர், இதர மத ஆசார்யருக்கு மரியாதை செய்வது இதே முதல் முறை. இது அத்வைதாசார்யருக்கே பெரும் புகழைத் தந்ததென்று கொண்டாடாதவரில்லை. முன்னிலும பன்மடங்கு பெரியவர்களிடம் அன்பு பெருகியது. ஒவ்வொருவரும் போட்டி போட்டுக்கொண்டு கைங்கர்யத்தில் ஈடுபட்டனர். அங்குள்ள புஷ்பங்கள் போதாமல் சென்னையிலிருந்து மணம் வீசும் மாலைகள் மலை போல் வந்து குவிந்தன. சொர்ண புஷ்பத்திலோ, மல்லிகை மலரிலோ உள்ளதைவிட அன்பு நிறைந்த அவர்களது அந்தக்கரணமே ஆசார்யரை அதிகமாக ஆனந்தப்படுத்தியது.

4. செவ்வாய், வெள்ளி, வியாழன் பகல் 12 மணிக்கு மேலும் பிரசாதம்

கொடுப்பதில்லை என்ற மடத்து வழக்கத்தை அறிந்திருந்தும் நான் கேட்டவுடன், "ஆனல் சரி" என்றே பதில் வந்தது. வழக்கம் போல், "க்ஷேமமாய் இரு. போய் வா" என்ற பதில் வரவில்லை. அப்பொழுதே எனக்குச் சந்தேகம். ஆயினும் வெளியில் வந்து விசாரித்ததும், 'காற்றினல் சாலையில் மரங்கள் விழுந்து பஸ் போகவில்லை' என்று தெரிந்தது. அப்பொழுதே அபசார பலனை அறிந்தேன். அதிகாலையிலேயே பெரியவர்களைத் தரிசிக்காமல் வேறு வழியாகச் சென்றேன்.



திடீரென்று என் எதிரில் தோன்றி, "உபந்நியாசம் நடந்ததோ?" என்று வினவினர்கள். என்ன சொல்வது? "பெரியவர்கள் உத்தரவு இல்லாததால் மழை மறித்துவிட்டது" என்றேன். "உபந்நியாசம் அங்கு நடக்கும். இங்கு ஓர் உபந்நியாசம் செய்துவிட்டுப் போ என்கிறது மழை" என்றார்கள். "உபன்யாஸம் கேட்டுவிட்டுப் போ, என்று கூறியதோ என நினைக்கிறேன்" என்றேன். "கேட்டுவிட்டும் போ, செய்துவிட்டும் போ" என்று பதில் வந்தது.

ஸ்ரீ வைஷ்ணவர்களாக இருந்து பேருபகாரம் செய்த அவ்வூராருக்கு ஓர் உபசார வார்த்தை யான் சொல்ல வேண்டும் என்பது பெரியவர்களின் திருவுள்ளம் போலும். அப்பொழுது உபந்யாஸகர் மலிவாக இல்லை.

**உபந்நியாசம் எப்படி இருக்க வேண்டும்?**

5. "உனக்கு போக்கியதை இருக்கிறது என்பதைக் காட்டப் பற்பல புரியாத விஷயங்களைக் கூறாதே. தெரிந்த விஷயத்தையே பன்னிப் பன்னிப் பேசாதே. வீண் வார்த்தைகளைக் கூறிக் காலத்தை வீணாக்காதே. சுருக்கமாகவும் விளக்கமாகவும், எளிதாகவும் பேசு. கேட்பவர், 'இன்று அபூர்வமான விஷயங்களைக் கேட்டோம். இதில் எளிதான ஒன்றையே அநுசரிக்க வேண்டும்' என்று எண்ணி எழுந்து போகும்படி பேசு. கேட்காத இடத்தில், 'நான் உபந்நியாசம் செய்கிறேன்' என்று வலுவில் வந்து பேசாதே. அழைத்த இடத்தில் அவகாசம் இருந்தால் மறுக்காதே. தனத்தைப் பெரிதாகக் கருதாதே" என்பது போன்ற பல விஷயங்களைக் கூறி, பெரியவர்கள் உள்ளே சென்றார்கள்.

வேதம், வேதாசாரமான காயத்ரி, நம் கோத்ர ரிஷி, பிரவர ரிஷிகள், ஸூத்ரம், ஜபத்தில் சில முக்கியமான ஆசாரம் இவற்றைக் கூறி, 'பெரியவர்கள் கேட்டால், பத்து காயத்ரியாவது விடாமல் செய்கிறோம் என்று கூறுங்கள்" என்று சொல்லி முடித்தேன்.

"நான் அவர்களைக் கேட்கவில்லை. நீ சொல்வதையே கேட்டேன்" என்று ஸ்வாமி ரதத்தின் பின்னலிருந்து ஒரு குரல் கேட்டது. எழுந்து நின்றால் ஆசார்ய தரிசனம் கிடைத்தது.

பிரசாதம் பெற்று நேராக மேற்படி ஸ்கூலுக்கு வந்து, நான் வர முடியாமல் போனது பற்றிக் கூறினேன். "தெய்வச் செயலாலன்றி நீங்கள் தவறமாட்டீர்கள் என உணர்ந்தோம். தங்களது கதையைக் கேட்க வந்த சிஷ்யர் ஸ்ரீமணி சாஸ்திரி மூலம் கதையை நடத்திவிட்டோம்" என்றார்கள்.



ஸ்ரீ காஞ்சி ஆசார்ய ஸ்வாமிகள்

மஹாஜனங்களுக்கு அநுக்கிரகம் செய்த

# ஐந்து முக்கிய ஆஜ்ஞைகள்

1. உபநயனத்தின் முக்கிய காலம் எட்டு வயதானபடியால், எக்காரணத்தைக் கொண்டும் அது பத்து வயதுக்கு மேற்போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பத்து வயதுக்குள் உபநயனம் செய்வித்த பையனை உபநயனமான பிறகு எந்தப் பள்ளிக்கூடத்துக்கும் அனுப்பாமல் சிவ பூஜையோ, அக்கினி ஹோத்ரமோ, வைச்வதேவமோ நடக்கும் தெரிந்த கிருகத்தில் ஒரு வருஷம் சுச்ரூஷை செய்யும்படி ஏற்பாடு செய்ய வேண்டும். அந்த ஒரு வருஷத்துக்குள், அந்த இடத்தில் சௌகரியம் இருந்தால் தன் வேத சாகையை ஒரு தடவை உபதேசமாக அத்தியயனம் செய்து கிரகித்து அந்த வருஷத்திலேயே வேதவிரதங்களை முடித்துக் கொள்ள வேண்டும்.

கடைசிப் பக்ஷமாக ஸந்தியாவந்தனம், ஸமிதாதானம், ப்ரஹ்ம யஜ்ஞம், பூஜா மந்திரங்கள் இவற்றையாவது மனப்பாடம் செய்ய வேண்டும்.

2. 45 வயதுக்கு மேற்பட்ட புருஷர்களும் ஸ்திரீகளும் கிராமத்தில் அல்லது தங்கள் எல்லைக்குள் வசிக்கும் ஒரு குருவைத் தேடி அவர்மூலம் சிவநாம ஜபமோ ராமநாம ஜபமோ எடுத்துக்கொண்டு, பிரதிதினம் கொஞ்ச காலம் நாமஜபம் செய்ய வேண்டும். சரியான குரு ஒருவரும் அகப்படாவிட்டால் அவ்வூரிலோ, பக்கத்துக் கிராமத்திலோ உள்ள தேவாலயத்தின் சந்நிதியில் ஜபத்தை ஆரம்பம் செய்து கொண்டு பிரதி தினம் நாமஜபம் செய்ய வேண்டும்.

3. சுபாசுப காலங்களில் நடக்கும் பிரயோஜனங்களில் அநுஜ்ஞை என்ற அம்சத்தை ஒரு வேத ஸம்ஹிதையைப் பூர்த்தியாக அத்தியயனம் செய்தவர்களுக்கே ஸமர்ப்பித்து ஆசீர்வாதம் பெற வேண்டும்.

விவாகங்களிலுள்ள மேளம், பந்தல், விருந்து, தாம்பூலம், ஊர்வலம் முதலிய லௌகிக கார்யங்களைப் பெண்ணின் வீட்டிலேயே ஒரு நாளில் பூர்த்திசெய்து, அன்றே ஆசீர்வாதம் நடத்தி, அன்று ராத்திரி ஔபாஸன அக்கினியுடன் பிரவேச ஹோமத்தை வரனுடைய வீட்டிலோ விடுதியிலோ செய்து, பின்பு மூன்று நாள் ஒரு வித லௌகிக ஆடம்பரமுமின்றி ஔபாஸனங்கள் செய்து கடைசி நாள் சேஷஹோமம் அல்லது நாகபலியுடன் பூர்த்தி செய்ய வேண்டும்.

4. அந்நிய மதஸ்தர்கள் நம் மதஸ்தர்களைத் தங்களுடைய மதத்துக்கு மாற்ற யத்தனித்தால், சாத்தியமான வரையில் ஸாத்விக வழிகளில் அதைத் தடை செய்ய வேண்டும். நம் மதஸ்தர்களிடத்தில் அந்நிய மதங்களுக்குப் போகாத பிரசாரமும் கூடிய மட்டில் பிரயத்தனமும் செய்ய வேண்டும்.

அடி மாடுகளாக உபயோகிக்கக்கூடியவர்களுக்கு மாடுகளை விக்கிரயம் செய்யாதபடி பிரசாரமும் கூடியவரையில் பிரயத்தனமும் செய்ய வேண்டும்.



**[ஸ்ரீ பகவான் செய்த லீலைகள் கணக்கில் அடங்கா. ஸ்ரீ பெரியவாளின் 77 வது ஜயந்தி விழாவில் கிருஷ்ண பகவான் செய்த லீலைகளில் 77 ஐ நினைத்து மகிழ்வோமாக]**



1. பூமிதேவியின் பிரார்த்தனைக் கிணங்கி ஸ்ரீபகவான் ஆவணி மாதத்தில் கிருஷ்ணபக்ஷத்து அஷ்டமி ரோகிணி நக்ஷத்திரம் கூடியசுபதினத்தில் வஸுதேவர், தேவகி என்ற தம்பதிகளுக்குக் குழந்தையாய் அவதரித்தார். பிறந்த குழந்தை செந்தாமரை போன்ற கண்களும், சதுர் புஜங்களும் சங்கம், சக்கரம் முதலிய ஆயுதங்களுடன் நீருண்டமேகம் போன்றமேனியும், பீதாம்பரமும் கௌஸ்துப மாலையும் குண்டலங்களும் கிரீடங்களும் அணிந்து பெற்றோர்களுக்கு காக்ஷி கொடுத்தது.



2, தாய் தந்தையருக்கு ஸ்ரீபகவானாக தரிசனம் கொடுத்த கண்ணன் சிறிது நேரத்தில் யோகமாயையால் தன்னுடைய திவ்ய ரூபத்தைமறைத்துச் சாதாரண குழந்தையாய் மாறினார்.

3. வஸுதேவரான தன்னுடைய தந்தையிடம் தன்னை கோகுலத்தில் நந்தனுடைய மனைவி யசோதையின் பக்கத்தில் விட்டுவிட்டு அவள் பக்கத்தில் உள்ள பெண் குழந்தையை அழைத்துவரச் செய்தார். யமுனை நதியை வழி விடச்செய்தார்.

4. 'கண்ணன்' தன்னைக் கொல்ல எங்கோ பிறந்திருக்கிறான் என்று கேள்விப்பட்ட கம்சன் 'பூதனை' என்ற அரக்கியை பச்சிளம் பாலகர்களுக்கு விஷம் கலந்த ஸ்தன்ய பானம் கொடுத்து கொல்லச் செய்தான். கண்ணன் பூதனையின் பாலை உறிஞ்சுகையில் அவளுடைய உயிரையும் குடித்தார். நந்தகோபன் திருஷ்டி கழித்தான். பூதனைக்கு மோக்ஷம் அளித்தார் கண்ணன்,

5. சுழல் காற்று வடிவத்தில் வந்த 'திருணாவர்த்தன்' என்ற அசுரனை தன் பலத்தால் மூச்சுத் திணற அடித்து வதம்செய்தார்.



6. கண்ணன் மண் தின்றான் என்று கேள்விப்பட்ட யசோதை கண்ணனின் வாயை கவனித்தாள். என்ன ஆச்சரியம்! அந்த வாயினுள் ஆகாயம், பூமி, சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், திக்குகள், கடல்கள், மலைகள், காடுகள், நதிகள் எல்லாவற்றையும் பார்த்தாள். ஆச்சர்யமும் திகிலும் ஒருங்கே அடைந்து தன் இரு கண்களையும் மூடிக் கொண்டாள். பகவானே தன் குழந்தை என்று அறிந்தாள்.



7. குழந்தை கண்ணனின் குறும்புத்தனம் எழுத்தில் அடங்கா. பால் கறக்கு முன்னே கன்றுகளை அவிழ்த்து விடுவான். கன்றுகளின் வாலைப் பிடித்துக் கொண்டு விளையாடுவான்.

8. வெண்ணை, தயிர், பால் முதலியவற்றை திருடித் தின்பான். குரங்களுக்கும் அவற்றைப் பிரித்துக் கொடுப்பான். வானரம் சாப்பிடாதிருந்தால் தயிர் இருக்கும் சட்டியை உடைத்து விடுவான். என்னே! கண்ணன் விளையாட்டு.



9. தயிர், வெண்ணை எட்டாவிடில் ஒருவர் முதுகில் ஒருவராக பல பாலர்கள் மேல் ஏறி அவற்றைத் திருடி அந்த பாலர்களுக்கும் வினியோகம் செய்வான்.

10. யசோதையிடம் ஒரு முறை கண்ணன் வெண்ணெய் திருடி விட்டான் என்று குற்றம் சாட்டி கையும் களவுமாய் கிருஷ்ணனைப் பிடித்துக் கொண்டு ஒவ்வொரு கோபிகையும் வந்தனர். யசோதை அருகே வந்ததும், தாங்கள் பிடித்து வந்த கண்ணன் இப்பொழுது தங்கள் குழந்தையாய் இருப்பதைக் கண்டு வெட்கமடைந்து, கோபிகைகள் தத்தம் இல்லம் திரும்பினர்.



11. யசோதை ஒரு சமயம் தயிர் கடைந்து கொண்டிருந்தாள். கண்ணன் அவ்வமயம் அவள் மடியில் உட்கார்ந்திருந்தான். அடுப்பில் பால் பொங்குவதை கண்ட யசோதை கண்ணனைக் கீழே விட்டு விட்டு உள்ளே சென்றாள். கண்ணன் கோபம் கொண்டு அம்மிக் குழவியை எடுத்து தயிர் சட்டியை உடைத்து அதில் இருந்த வெண்ணையை எடுத்து பக்கத்தில் இருந்த உரலின் மீது ஏறி பூனைக்கும் கொடுத்து தானும் தின்றான்.

12. யசோதை கண்ணனை உரலில் கட்டினாள். உரலை இழுத்துக் கொண்டு கொல்லைப் புறம் இருந்த மருத மரத்தில் மோதினார். மருத மரம் சாய்ந்தது. மரமாய் இருந்த குபேரன் புதல்வர்கள் தங்கள் இருப்பிடம் புறப்பட்டனர்.



13. ஒரு நாள் பழம் விற்கும் ஒருத்தி ''பழமோ பழம்'' என்று தெருவில் கூவினாள். கண்ணன் கை நிறைய தானியத்துடன் ஓடி வந்து பழம் கேட்டான். செந்தாமரை மலரை போன்ற கண்களுடைய கண்ணனைப் பார்த்து பழக்காரி மகிழ்ச்சி அடைந்தாள். கைகள் நிறைய பழத்தை அள்ளிக் கொடுத்தாள். பிறகு பழக்காரி கூடையைப் பார்த்தாள், என்ன ஆச்சர்யம்? கூடை ரத்தினங்களாலும் பொன்களாலும் நிறைந்திருந்தது. கண்ணன் பழங்களை கோபியருக்கும் சிறுவர்களுக்கும் கொடுத்து மகிழ்ந்தான்.

14. கண்ணன் பலராமனுடனும் யாதவ சிறுவர்களுடனும் மாடுமேய்த்துக் கொண்டிருந்தான். ஒரு அசுரன் கன்று வடிவத்தில் வந்து பசு மந்தையில் புகுந்தான். அந்தக் கன்றை வாலில் பிடித்து சுழற்றி கண்ணன் ஆகாயத்தில் எறிந்தான்; அசுரன் மாய்ந்தான்.



15. கொக்கு வடிவத்தில் வந்த கொக்காசுரனை கொக்கின் அலகுகளைக் கிழித்து கொன்று சிறுவர்களைக் காப்பாற்றினான்.

16. ஒரு நாள் கண்ணன் ஆயிரக்கணக்கான இடைச் சிறுவர்களுடன் தயிர் சாதம், புளியம் சாதம், தின்பண்டங்கள் இவற்றை புசித்துக் கொண்டும் மயில் தோகை, மலர் போன்றவற்றால் அலங்கரித்துக் கொண்டும் குரங்குகள் இருக்கும் இடத்தில் குரங்குகளைப்போல் குறும்புகள் செய்தும் பல்லை இளித்து விளையாட்டுக் காட்டியும் குரங்குகளின் வாலைப் பிடித்து இழுத்தும் மரத்தில் ஏறி அவற்றை துரத்தியும் விளையாடினான். மலைப்பாம்பு வடிவத்தில் வந்த அசுரனை வதைத்தான்.



17. செறுக்குக் கொண்ட பிரமன் ஆயர் பாடியிலுள்ள கன்றுகளையும் சிறுவர்களையும் தன்னுடைய உலகுக்கு அழைத்துப்போய் விட்டான். கண்ணன் இதையறிந்து தானே கன்றுகளாகவும் சிறுவர்களாகவும் ஆகிவிட்டான் பிரமன் இதை அறிந்து வெட்கமுற்று தான் செய்த அபசாரத்தை பொறுத்தருளும்படி வேண்டினான். கண்ணனும் மன்னித்தருளினான்.

18. பனம்பழங்கள் தின்ன ஆசைப்பட்ட சிறுவர்களுக்கு கழுதை உருவத்தில் வந்து தாக்கிய தேனுகன் என்ற அசுரனையும் நரி உருவத்தில் வந்த அசுரர்களையும் பலராமனும் கண்ணனும் கொன்று, பனம்பழங்களைத் தின்னும்படி செய்தார்கள்.



19. கொடிய காளியன் என்ற விஷப்பாம்பை அடக்க எண்ணி அதன்மீது ஏறி நர்த்தனம் செய்தான். காளியன் மன்னிப்புக் கோரி உத்திரவு பெற்றுக் கொண்டு யமுனையிலிருந்து கடலுக்குப் போனான்

20. தன்னைத் தூக்கிக்கொண்டு ஓடிய பிரலம்பன் என்ற அசுரனை ஒரு குத்தினால் பலராமன் கொன்றான்.

21. பசுக்கள் ஒரு நாள் காட்டில் வெகு தூரம் சென்று காட்டுத் தீயில் மாட்டிக்கொண்டு கதறின. அதைப் பார்த்து கோபர்கள் கதறினார்கள். கண்ணன் ''கவலைப்படாதீர்கள் கண்களை மூடிக்கொள்ளுங்கள்'' என்று சொன்னான். கோபர்களும் அவ்வாறே செய்தனர். கண்ணன் அந்த நெருப்பை உண்டு, தன் உறவினர்களை ஆபத்திலிருந்து காத்தான்.



22. கண்ணனின் குழல் ஓசையில் பசுக்களும் மயங்குவர். கோபியரும் மயங்குவர். கண்ணன் குழல் ஊதி தெய்வீக ஆனந்தத்தைக் கொடுத்தான்.

23. கண்ணனைக் கணவனாய் அடைய கோபியர்கள் காத்யாயினி நோன்பு நூற்றனர். கண்ணனும் 'உங்கள் விருப்பம் நிறைவேறும்' என்றான்.

24. ஆடையில்லாமல் ஸ்னானம் செய்த கோபிகளுக்கு புத்தி புகட்டினான்.

25. பசியுற்ற கண்ணனுக்கும், கோபர்களுக்கும் உணவு கொடுத்த அந்தண மாதர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணன், பகவானை தியானிப்பதும், கதை கேட்பதும் சிறந்தது என்று கூறி அனுக்ரஹம் செய்தார்.

26. இந்திரனுடைய கர்வத்தை அடக்க அவனுக்கு செய்ய வேண்டிய யாகத்தை நிறுத்தினார். செறுக்குற்ற இந்திரன் கொடும் மழை பெய்து ஹிம்சித்தான். பகவான் கோவர்தனம் எனும் மலையைக் குடையாயப் பிடித்து கோப கோபியர்களைக் காப்பாற்றினார்.



27. பசுக்களைக் காப்பாற்றியதால் கண்ணன் 'கோவிந்தன்' என்ற பெயர் பெற்று இந்திரனால் பட்டாபிஷேகம் செய்யப்பட்டான்.

28. தன் வளர்ப்புத் தந்தையான நந்தரை யமுனையில் ஸ்னானம் செய்யும் பொழுது ஒரு அசுரன் வருணலோகம் அழைத்துச் சென்றான். அதை அறிந்த கண்ணன் அவரை மீட்டு வந்து கோபர்களை மகிழ்வித்தான்.

29. கோபியர்களுக்கு அனுக்ரஹம் செய்து பிரம்மானந்தத்தை அளித்தான்.

30. அம்பிகாவனம் சென்று, சரஸ்வதி நதியில் நீராடி மகா தேவரையும் உமையையும் பூசித்து அந்தணர்களுக்கு தானம் தர்மம்செய்த நந்தனை பாம்பு ஒன்று விழுங்க, கண்ணன் தன் திருவடிகளால் உதைத்து பாம்பு வடிவத்தில் வந்த வித்யாதரனை அவனுடைய இருப்பிடத்திற்கு அனுப்பினான்.



31. கோபியர்களை அபகரித்துச் சென்ற சங்க சூடனை துரத்தி முஷ்டியால் அடித்து கோபியர்களைக் காப்பாற்றி அவன் தலையில் இருந்த இரத்தினத்தை பலாரமனிடம் கொடுத்தான் ஸ்ரீபகவான்.

32. ரிஷப உருவில் வந்து கோகுல வாஸிகளுக்கு துன்பம் கொடுத்த அரிஷ்டன் என்ற துஷ்டனை கொம்புகளைப் பிடித்து தள்ளி மிதித்து கொம்பை ஒடித்து அதனாலேயே அடித்து அவனைக் கொன்று மக்களைக் காப்பாற்றினான் கண்ணன்.

33. குதிரை வடிவில் வந்த கேசி, எனும் அசுரனை கால்களைப் பிடித்து சுழற்றி வதம் செய்தான் ஸ்ரீகண்ணன்.



34. நாரதர் மூலம் ''கண்ணன்'' தன்னுடைய ''சத்துரு'' என்று அறிந்து, கம்ஸன் அக்ரூரரை கோகுலத்துக்கு அனுப்பி கண்ணனை அழைத்துவரச் சொன்னான். அக்ரூரரை முறைப்படி உபசரித்து அவருக்கு ஆசனம் கொடுத்து, உணவு படைத்து சந்தனம் பூசி, மலர்மாலை அணிவித்து கௌரவித்தான் கண்ணன்.



35. அக்ரூரருடன் தேரில் கண்ணனும், பலராமனும் மதுரைக்குப் புறப்பட்டனர். தேரைவிட்டு இறங்கி யமுனையில் ஸ்னானம் செய்த அக்ரூரர், ஆற்றினுள்ளே ஸ்ரீ கண்ணனும் ராமனும் இருப்பதைக் கண்டு வியப்புற்று கரையில் கவனித்தார். அங்கும் இருவர்களையும் பார்த்தார். ஸ்ரீ பகவான் ஆதிசேடன் மீது கண்ணன் சயனித்ததையும் பார்த்து துதி செய்தார். மூவரும் மதுரை வந்து சேர்ந்தனர்



36. கண்ணனுடைய ஸ்வரூபத்தைப் பார்த்து மாந்தர்கள் மகிழ்ந்தனர். அந்தணர்கள் அக்ஷதை, பூர்ணகும்பம் முதலியவற்றுடன் வரவேற்றனர். கண்ணன் எல்லோருக்கும் ஆசி கூறினார்.

37. செருக்குற்ற வண்ணானை சிக்ஷித்து தங்களுககுத் தேவையான உடைகளை கண்ணனும், பலராமனும் எடுத்து அணிந்தனர்.

38. சிறந்த மலர் மாலைகள் அளித்த 'சுதாமா' என்ற மலர் வியாபாரிக்கு ஐஸ்வர்யம், ஆரோக்யம், ஆயுள், புகழ் எல்லாவற்றையும் அளித்தான் கண்ணன்.

39. சந்தனம் எடுத்து வந்த கூனியின் முதுகை நிமிரச் செய்து அவளுக்கு அனுக்ரஹம் செய்தான் கண்ணன்.

40. வில் இருந்த இடத்தை யடைந்து வில்லை முறித்தான் கண்ணன். கம்ஸன் பயந்து நடுங்கினான்.

41. 'குவலயாபீடம் என்ற யானையைக் கொன்றார்.



42. முஷ்டிகன், சாணூரன் என்ற இருமல்லர்களையும் பலராமனும், கண்ணனும் கொன்று உலகைக் காப்பாற்றினார்கள்.

43. கம்ஸன் இருக்கும் பீடத்தின் மீது ஏறி, கம்ஸனை வதைத்தார். கம்ஸனுக்கு முக்தியை அளித்தார்.

44. தாய், தந்தையர்களை மீட்டு அவர்களை வணங்கி உக்கிரசேனரை அரசராக அமர்த்தினான் கண்ணன்.



45. கண்ணனுக்கு உபநயனம் செய்வித்து சாந்திபினி என்பவர் மூலம் வேதம், வில் வித்தை, தர்ம சாஸ்திரம் தர்கம் எல்லாம் போதிக்கப்பட்டன. சாந்திபினியின் இறந்த குழந்தையை யமனிடம் கேட்டு வாங்கி குருதக்ஷிணையாய் கொடுத்தான் கண்ணன்.

46. கண்ணன் உத்தவரை நந்த கோகுலம் அனுப்பி கோபியர்களுக்கு தான் நலமாய் இருப்பதைச் சொல்லி அனுப்பினார். கண்ணனின் கதைகளைக் கேட்டு கோபியர்கள் புளகாங்கிதம் அடைந்தனர். என்னே கோபியர்களின் பக்தி!



47. பாண்டவர்களை விஷம் கொடுத்த பொழுதும் அரக்கு மாளிகையில் வைத்து கொளுத்த வந்த பொழுதும் காப்பாற்றினான் பக்த பரா தீனனான கண்ணன்

48. திரௌபதியை துச்சாதனன் துகில் உரித்த சமயத்தில் ஆபத்பாந்தவனான கண்ணன் காப்பாற்றினான்.



49. துவாதசியன்று பரம கோபிஷ்டரான துர்வாஸர் வரும் சமயம். கீரையைப் புசித்து பாண்டவர்களை துர்வாச சாபம் வராது காப் பாற்றிய கண்ணனின் பெருமையை எவ்வளவு வர்ணித்தாலும் போதாது.



50. துஷ்டனுன ருக்மியை அவமானம் செய்து, தன்னை வரித்த ருக்மணி என்ற உத்தமி யையும் ஜாம்பவதி, சத்யபாமை, தாளிந்தி முதலிய அஷ்டமகிஷிகளையும் விவாஹம் செய்து கொண்டான் கண்ணன்.

51. பாணுசூரனை வதைத்து பாணனுடைய பெண் உஷையை அனிருத்தனுக்கு விவாஹம் செய்வித்தார் கோபாலன்.



52. நரகா சூரனைவதைத்து பூமாதேவியின் பிரார்த்தனைக் கிணங்கி 'நரக சதுர்தசி' பூமியில் கொண்டாட இசைந்து நரகாசுரனுல் காவலில் வைக்கப் பட்ட பெண்களை சிறையிலிருந்து மீட்டு அவர்களையும் விவாஹம் செய்து கொண்டார்.

53. சூர்ய வம்சத்தில் வந்த நிருகன் என்ற அரசன் சாபத்தால் ஓணுன் உருவத்தை அடைந் திருந்தான். கண்ணனுடைய கடாக்ஷத்தால் விண்ணுலகை அடைந்தான்.



54. பல மனைவிகளுடன் கண்ணன் எவ்வாறு இல்லற வாழ்க்கை நடத்துகிறுன் என்று அறிய வந்தார் நாரதர். கண்ணன் ருக்மணியின் வீட்டில், சாமரம் போடப்பட்டும் மற்றெரு அரண் மனையில் தன் இன்னெரு மனைவி யுடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டும், இன்னெரு வீட்டில் குழந்தைகளை கொஞ்சி விளையாடிக் கொண்டும் பல உருவத் தில் காக்ஷியளித்தார்.



55. ஜராசந்தனை பீமன் மூலம் வதம் செய்து ஜராசந்தனுல் சிறை பட்ட எல்லா அரசர்களையும் விடு வித்தார் கண்ணன்.

56. தர்மபுத்ரருக்கு ராஜ சூய யாகம் செய் வித்து. யாகத்திற்கு வந்த அந்தணர்களை கால் அலம்பி பூஜை செய்தான் கண்ணன்.



57. தன்னை நிந்தித்த சிசுபாலனை சக்ராயுதத்தால் கொன்று அவனுக்கு மோக்ஷம் அளித்தார் பகவான்.

58. பாகவதோத்தமனுன குசேலர் என்ற ஏழைக்கு இரங்கி அவர் கொண்டுவந்த அவலை உண்டு, அவருக்கு அர்கபாத்யாதிகள் கொடுத்து அவருக்கு உணவு கொடுத்து அவருடைய வறுமையைப் போக்கினுன் கண்ணன்.



59. உற்றூர். உறவினர், ஆசிரியர் இவர்களுடன் போர்புரிய மறுத்த அர்ஜுனனுக்கு ஸ்ரீமத் பகவத்கீதையை உபதேசம் செய்தான் கண்ணன்;

60. கண்ணன் 'மஹா பிரதோஷம்' என்ற விரதத்தை அனுஷ்டித்து மஹா பூஜித்து பல குழந்தைகளைப் பெற்றூர்.



61. 'தயிர்' 'பால்' விற்கும் ஒரு கோபிகை ஸ்ரீ பகவானின் மீது உள்ள பிரேமையால் தயிர், பால், வெண்ணை என்று கூவாமல் ஹே கோவிந்தா, தாமோதரா மாதவா'' என்று கூவினுள். என்னே கோபிகை களின் பக்தி.

62. ஒருநாள் கண்ணன் குழந்தையாய் இருந்த சமயம் யசோதை கதை சொல்லிக் கொண்டிருந்தாள். 'ராமன் என்று ஒருவன் இருந்தான். தன் மனைவியுடன் வனம் புகுந் தான்.. சீதையை ராவணன் எடுத்துச் சென் றுன்' என்று கதை சொல்லிக் கொண்டே போனுள். தொட்டிலில் இருந்த சிசுவான கண்ணன் தன்னை மறந்து 'லக்ஷ்மணு, வில்லை யும், அம்பையும் எடு' என்று கத்திற்று. யசோதை பயந்துபோய் திருஷ்டி கழித்தாள்.



63. யசோதை குழந்தைக்கு நடை கற்றுக் கொடுத்தாள். யசோதையின் இரண்டு விரல்களைப் பிடித்துக் கொண்டு பகவான் சிறிது தூரம் நடந்தார். பிறகு 'உனக்கு முன்னால் நான் ஓடி விடட்டுமா' என்றார். யசோதை வியந்தாள். பகவான் தவழ்ந்து கொண்டே வீடு பூராவும் ஒருமுறை சுற்றிவந்தார். மூன்றடிகளால் உலகங்களை அளந்த கண்ணனுக்கு நடக்கக் கற்றுக் கொடுத்தாள் யசோதை.



64. தேவர்களுக்கு சகாயம் செய்து ஓய்வுஎடுத்துக் கொண்ட முகுந்த சக்வர்த்தியின் தூக்கத்தைக் கெடுத்த கால யவனனை சாம்பலாய் போகச் செய்துமுகுந்தனுக்கு பரம பதத்தை அளித்தான் கண்ணன்,



65. கோபிகைகள் ''வைகுண்டம்'' பார்க்க ஆசைப்பட்டனர். கண்ணை மூடிக் கொண்டால் இங்கேயே 'வைகுண்டம்' பார்க்கலாம் என்றான் கண்ணன். கோபியர்களும் அவ்வாறே செய்தனர். ஆயர்பாடியில் கண்ட கண்ணனை ஆதிசேஷதல்பத்தில் கண்டனர். ஆனால் துவார பாலகர்கள் அவர்களை உள்ளே நுழைய அனுமதிக்கவில்லை. இங்கு கண்ணன் இருப்பதே மேல் என்று கூறி கண்ணனை கோகுலத்தில் இருக்கும்படி கூறினர்.

66. 'அபாண்டவாஸ்திரம்' எனும் அஸ்திரத்தால் உத்தரையின் கர்ப்பத்தில் தகிக்கப்பட்ட 'பரீக்ஷித் மஹாராஜனை' காப்பாற்றினன் கண்ணன்.

67. பக்தர்களான பாண்டவர்களுக்காக துர்யோதனிடம் தூது சென்றான் கண்ணன்.

68. பாரிஜாத புஷ்பம விரும்பிய சத்ய பாமையின் வேண்டுகோளுக்கு இணங்கி தேவலோகத்திலிருந்து பாரிஜாத மரத்தை நமக்காக எடுத்துவந்தார் கண்ணன்.

69. துயறுற்ற திரௌபதிக்கு சமாதானம் கூறி அவளை அரசர்க்கரசியாய்ப் பட்டம் கட்டுவதாக வாக்களித்தான் பக்தவத்ஸலனான கண்ணன்.



70. பீஷ்மரால் பலவிதமாக ஸ்தோத்திரம் செய்யப்பட்டு அவருக்கு கடைசி காலத்தில் திவ்ய தரிசனம் அளித்து 'பீஷ்ம முக்திப் பிரதாயகன்' என்ற பெயர் பெற்றான்.

71. கோபங் கொண்ட உதங்கருக்கு உலகத்தைக் காப்பதற்காகவும் தருமத்தை நிலைநிறுத்தவும் தான் பிறந்ததைக் கூறி, தன்னுடைய விஸ்வரூபத்தையும் காட்டினன் கண்ணன்'



72. துரியோதினுதிகளை வதைத்த பீமனைக் திருதிராஷ்டிரன் ஆலிங்கனம் செய்வது போல் நடித்து கொல்ல நினைத்தான். அப்பொழுது பகவான் இரும்பு பிரதிமையை திருதிராஷ்டிரன் முன் தள்ளினர். பீமன் என்று நினைத்து அந்த பிரதிமையை நொறுக்கினன் குருடனை திருதிராஷ்டிரன். கண்ணன் நகைத்து விட்டு நொறுக்கியது இரும்பு பிரதிமையே யன்று பீமன் அல்ல என்று சொல்ல வெட்கமுற்றான் திருதிராஷ்டிரன்.

73. அதர்மம் செய்த துர்யோதனன் துச்சாதனன் போன்றவர்களை பாண்டவர்கள் நிமித்தமாய் ஒழித்து பூபாரத்தை நிவர்த்தி செய்தான் கண்ணன்.



74. துஷ்டனை துர்யோதனனுக்கு 'சுபத்ரையை' விவாஹம் செய்ய ஏற்பாடு செய்தார் பலராமர். தன் தங்கையான 'சுபத்ரையை' உத்தமனை அர்ஜுனனுக்கு கபடமாய் கல்யாணம் செய்து வைத்தான் கண்ணன்.

75. பக்தர்களான பாண்டவர்களுக்கு ராஜ்யாபிஷேகம் செய்வித்து, குந்தியால் துதிக்கப்பட்டு ஜனங்களால் கொண்டாடப் பெற்றான் கண்ணன்.



76. பகவான் பிரளய காலத்தில் ஆலிலையில் பள்ளி கொண்டு தன் கால் கட்டை விரலை நாவில் சுவைத்து தன் டையர் பாதத்தில் உள்ள அமுதத்தை சுவைத்தான் என்று,

77. எந்த கண்ணனை உபநிஷதங்கள் தேடுகின்றனவோ, பக்தர்கள் துதிக்கின்றார்களோ, யோகிகள் பரப்பிரும்மாய் பாவிக்கிறார்களோ, அந்த பகவானை ஸ்மரிப்போம்.

அந்த பகவானின் பாதாரவிந்தங்களில் நமஸ்கரித்து, அவனை நினைந்து, அவன் புகழ் பேசி, அவனிடம் நம்மை அர்ப்பணிப்போம்.

(இந்த லீலைகள் எழுதியதில் தவறு இருந்தால் சாதுக்கள் க்ஷமிக்க வேண்டும்.)

# The feeling of early morning freshness for hours and hours

Yes, you can keep that feeling of early morning freshness for hours and hours after a bath ... with Pond's Dreamflower Talc—India's largest selling talc.

Pond's Dreamflower Talc has a delicate perfume that lingers on and on ...

Pond's Dreamflower Talc absorbs moisture quickly, keeps you so nice-to-be-near ... cool, fresh, fragrant; even in the hottest, stickiest weather. It's the all-weather talc you can use throughout the year!

Available in 3 sizes: Family—Large—Medium




**Pond's**

*Dreamflower talc*

—the softest luxury talc you can buy!

CHESEBROUGH-POND'S INC.

(Incorporated in the U.S.A. with Limited Liability)



# GANDHIJI AND KANCHI ACHARYA



Mahatma Gandhi was touring the South in the latter half of 1927. He had heard about the Sage of KAMAKOTI PEETA, and wanted very much to meet him. The Sage was camping at Palghat at the time in the course of His VIJAYATRA.

The Mahatma went there on the 15th of October, 1927; the meeting took place on that day at Nellisseri village, Palghat, Kerala.

His Holiness received the Mahatma in the cattleshed situated in the back-yard of the camp. It was a unique experience for the Mahatma. Here was an authentic successor of Adhi Sankara, dressed in a piece of ochre cloth made of KHADI and seated on the floor. Acharya too appreciated the occasion provided for getting to know, at first hand, the leader of the nation who had adopted voluntarily the mode of a simple peasant's life.

At the very first sight, the Mahatma was drawn to the Perfection Incarnate that was seated before him. The atmosphere was surcharged with spiritual silence. After a few moments, the Acharya spoke in Sanskrit and invited the Mahatma to take his seat. Gandhiji offered his obeisance and sat near the Acharya. He said that, as he was not used to speaking in Sanskrit, he would use Hindi if that was permitted and that he could understand what is spoken in Sanskrit. So, the conversation took place without the need of an interpreter. The Acharya spoke in Sanskrit and Gandhiji in Hindi.

This was purely a private interview; there were no reporters; and except for one or two attendants of the Math, no one was present. The conversation which took place in a most cordial atmosphere, lasted for over an hour.

On taking leave of the Acharya, the Mahatma gave expression to the immense benefit he had derived from this unique meeting. How profoundly he was drawn to the Acharya will be evident from an incident that occured during the interview. It was 5-30 p. m. in the evening. Sri C. Rajagopalachari who had accompanied the Mahatma and had been waiting out-side, went inside the cattle-shed and reminded the Mahatma about his evening meal, for the Mahatma would not take any food after 6 p.m. The Mahatma made this significant observation to Sri C. Rajagopalachari: "The conversation I am having now with the Acharya is itself my evening meal for to day". As the Mahatma was leaving after a very fruitful interview, the Acharya gave him a pomelo fruit with his blessings. The Mahatma received it with great reverence, remarking that pomelo was a fruit which he liked best.

Later in the evening, Gandhiji addressed a public meeting in Coimbatore. Some people in the audience were eager to know about the interview Ganhiji had had earlier with His Holiness. Gandhiji replied saying that they discussed points of mutual interest, that the interview was a private one, that because of this newspaper reporters were not present there, and that there was no point in his disclosing the details of the interview. Nothing more was known about this historic meeting.

A request was made to His Holiness in November, 1968, for a message on the occasion of the Seminar on "THE RELEVANCE OF MAHATMA GANDHI TO THE WORLD OF THOUGHT" held at the University of Madras. Out of His abundant grace, the Jagadguru, the Preceptor of the World, sent a message in which he recalled the meeting in 1927 with Gandhiji, the Father of the Nation, and paid the following tribute.

"We wish to place before the Seminar on of the many things which Gandhiji and w discussed when we met at Palghat in Kerala in the last PRABHAVA year. Before Gandhiji arrived at Palghat, there came the news the assassination of Sraddhnanda of the Arya Samaj. Referring to this incident, Gandhiji remarked as follows:

"I have an apprehension in my mind that assasination of this kind would occur more often than now (in the coming years). Let not there arise in me hatred even in a small measure against the present assassin. There arises a desire in me that I should be able to embrace with love even so cruel a man who commits a heinous crime, as this one, an ATATAYIN. But it is extremely difficult to cultivate such heartfelt affection. Yet I shall make an honest attempt in this direction". All that we wish to point out is that in this world, it is very rare even to hear about such a feeling expressed."

—*Courtesy 'Bhavan's Journal'*.

---

**காமகோடிப் பெரியவாளின்**

தாய்—மகாலக்ஷ்மி அம்மாள்

தந்தை—ஸுப்ரமண்ய சாஸ்த்ரிகள்

பிறந்த ஊர்—விழுப்புரம்

பிறந்த நாள்—ஜய-வைகாசி-8, அநுஷம் ஞாயிறு (20-5-1894)

பூர்வாஸ்ரமத் திருநாமம்—ஸ்வாமிநாதன்

தற்போதைய திருநாமம் — சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதி (7)

பட்டம்—68-வது பட்டம்

ஆசார்ய பீடம் ஏற்ற இடம்—கலவை

ஆசார்ய பீடம் ஏற்ற நாள் — பராபவ - மாசி 2-ம் புதன் (13-2-1907)

பட்டாபிஷேகம் நிகழ்ந்த இடம் — கும்பகோணம்

பட்டாபிஷேகம் நிகழ்ந்த நாள் — பிலவங்க - சித்திரை - 27, வியாழன் (9-5-1907)

ஸ்ரீ ஜகத்குரு நீடூழி காலம் வாழ அன்னை காமாக்ஷி அருள் புரியப் பிரார்த்திப்போம்.

# ஸ்ரீ பகவத்பாதரின் பெருமை

*ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்*



### பஜகோவிந்தம்

ஆச்சாரியர்களின் உயரிய நூல்களில் ஒன்று பஜகோவிந்தம். பக்தி இல்லையென்றால் அறிவினால் பயன் இல்லை என்றும், எனவே கல்வியின் லட்சியம் ஈசுவர பக்தியை வளர்ப்பதுவே என்று ஆசாரியர் கூறியிருக்கிறார்.

மற்ற எதற்கும் நேரமில்லாத மக்கள் சதா சர்வகாலமும் உலகில் கஷ்டங்களினால் அவதிப்படுகின்றனர். இந்தக் கஷ்டங்கள் சொப்பன நிலையிலும் சென்று துன்புறுத்துகின்றன. ஒருவனது உத்தியோகம் அல்லது கல்விநிலை எதுவாக இருந்தாலும் ஒவ்வொருவரும் கடவுள் தியானத்துக்குச் சிறிது நேரம் ஒதுக்கி வைக்க வேண்டும். இதனால் மன அழுக்கு நீங்க வழி பிறக்கும். ஒவ்வொரு நாளும் சேரும் அழுக்குகளை அன்றாடம் நீராட்டத்தினால், 'பஜகோவிந்தம்' என்ற நீராட்டத்தினால் மனத்தைப் புனிதமாக்க வேண்டும்.''

### ப்ரச்னோத்தர ரத்னமாலிகை

ஆதி பகவத்பாதர்கள் ப்ரச்னோத்தர ரத்னமாலிகை என்று ஒரு கிரந்தம் செய்திருக்கிறார்கள். அது பூராவும் கேள்வியும் பதிலுமாகவே இருக்கும். அதில் ஒரு கேள்வி இருக்கிறது. அதாவது. 'கிம் ஸம்ஸாரே ஸாரம்?' என்பது. ஸம்ஸாரத்தில் எது ஸாரமானது?'' அதற்குப் பதிலும் இருக்கிறது. ஆனால் எனக்குச் சட்டென்று அர்த்தம் புரியவில்லை. ''பஹுசோபி விசிந்த்யமாநம் இதமேவ'' என்று பதில். பஹுசோபி என்றால் அநேக தடவை என்று அர்த்தம். இதையே நினைப்பதென்றால் இந்தக் கேள்வியையே திருப்பித் திருப்பி நினைப்பதென்றே அர்த்தம். 'சம்சாரத்தில் சாரம் எது?' என்பதைத் திருப்பித் திருப்பி நினைக்கிறது. இருக்கிறதே அதுதான் சாரம். அதாவது சம்சாரத்தில் சாரமொன்றில்லை என்பது தான் அதற்குப் பதில். இப்படி முப்பது வருஷமாக அர்த்தம் சொல்லிக்கொண்டிருந்தேன். இப்போது வேறு விதமாகத் தோன்றுகிறது. நிறைய சாரம் இருப்பதாகவே தோன்றுகிறது.

அப்படியில்லையென்றால் நாம் ஏன் மனுஷ்யர்களாய் பிறக்கவேண்டும்? ஏதோ ஒரு வாசனையால் ஜன்மா வந்து சேருகிறது அதிலே பல கஷ்டங்கள் பாபங்கள் ஏற்படு

கின்றன. கடைசியில் ஒரு நல்லது ஏற்படுகிறது.

ஒரு மரமோ செடியோ, அதுவும் உயிருள்ள வஸ்துதான். அதுவும் வளருகிறது ஜலம் விட்டால் சந்தோஷப்படுகிறது. ஜலம் விடாவிட்டால் அழுகிறது. அதிலே பக்ஷிகள் வந்து தங்குகின்றன. அவை சந்தோஷமாக இருக்கின்றன. ஆகையினால் சம்சாரத்திலே சாரமில்லை என்று சொல்ல முடியாது. நிறைய இருக்கிறது. அதைக் கண்டுபிடிக்க உழைக்க வேண்டும். அதிலே எத்தனையோ கஷ்டங்கள் வரும்.

பத்தாயிரம் பேர் கஷ்டப்பட்டு உழைத்தால் அதிலே ஒருத்தனுக்குப் பிரயோஜனம் ஏற்படும். அவன் அடைந்த பிரயோஜனம் இவ்வளவு பேர் பட்ட கஷ்டத்துக்கு ஈடாக இருக்கும்.



ஒவ்வொருவருக்கும் ஒரு சமயம் வரும். காரணமில்லாத ஒரு காரியமும் கிடையாது என்பது ஒரு பழமொழி. காரியமோ அனந்தமாக இருக்கிறது. ஏதாவது ஒரு காலத்திலே ஒவ்வொருவருக்கும் ஒரு சமயம் வரும். பிரயத்தனம் பண்ணினால் வீணாகப் போகாது. 'நாம் பிறந்ததற்கு என்ன பிரயோஜனம்? எதற்காகப் பிறந்தோம்?' என்று நினைக்க வேண்டும். அந்த பிரயோஜனத்தை அடைவோமா என்று நினைக்க வேண்டும். ஏதோ ஒரு மரத்தில் காய்க்கும் காய்களில் சில வெதும்பிப் போகின்றன. சில காய்ந்து போகின்றன. சிலவே பழுக்கின்றன. அப்படி எல்லாம் பழுத்தாலும் உலகத்தில் கஷ்டந்தான். ஒரே மரமாகத்தான் இருக்கும். அதனால் ஏதோ ஐம்பதாயிரத்தில் ஒன்றுதான் நல்லதை அடைய முடியும். அந்த நல்லதை அடைவதற்கு இவ்வளவையும் அர்ப்பணம் பண்ண வேண்டும் 'நமக்கு ஏன் பாபம் வருகிறது? கோபம் வருகிறது? காமம் வருகிறது? இவையெல்லாம் ஏன் வரவேண்டும்? எப்போதும் ஆனந்தமாக, சந்தோஷமாக இருக்கக் கூடாதா? என்று தோன்றுகிறது. இதற்குப் பதில் ஒன்றும் நமக்குப் புரியவில்லை. எல்லாம் நல்லதற்குத்தான், ஒரு மரத்திலே புஷ்பித்ததிலிருந்துதான் காயும் பழமும் உண்டாகின்றன. புஷ்பமாக இருக்கும் போது மூக்குக்கும் பழமாக இருக்கும் போது நாக்குக்கும் உபயோகப்படுகின்றன. பழம் நல்ல மதுரமாக இருக்கிறது. இந்த மதுரம் வருவதற்கு முன்பு எப்படி இருந்தது? பூவில் கசப்பாகவும், பிஞ்சில் துவர்ப்பாகவும், காயில் புளிப்பாகவும் பிறகு மதுரமாகவும் இருக்கிறது. மதுரம் என்பது தான் சாந்தம். சாந்தம் வந்தால்

எல்லாப் பற்றும் போய்விடுகிறது. உடனே கீழே விழுந்துவிடுகிறது. அதுபோல இருதயத்தில் எல்லா இடத்திலும் மதுரம் வந்துவிட்டால் தானாகவே எல்லாப் பற்றும் போய்விடும். புளிப்பு இருக்கும் வரை பற்று இருக்கும். அப்போது காயைப் பறித்தால் காம்பில் ஜலம் வரும். காயிலும் ஜலம் வரும். ஆனால் நிறைந்து மதுரமாக ஆகிவிட்டால் தானாகவே பற்றும் போய்விடும்; ஆனந்தமாக இருக்கும். ஒவ்வொருவனும் இப்படியே ஆனந்தமாக இருப்பான்.

பழமாக ஆவதற்கு எப்படிப் புளிப்பும் துவர்ப்பும் வேண்டியிருக்கின்றனவோ அதுபோலக் காமம், கோபம், துவேஷம் வேண்டியவைதாம். இவையெல்லாம் ஏன் வருகின்றன என்று அடிக்கடி நினைத்துப் பார்க்க வேண்டும், 'இதனால் ஏதாவது பிரயோ



ஜனம் உண்டா? அவசியமாக வருகிறதா? அநாவசியமாக வருகிறதா?' என்று நினைத்துப் பார்க்க வேண்டும் அப்படி நினைக்கவில்லை யென்றால் அது நம்மை ஏமாற்றிவிடும். ஏமாந்தும் விடுவோம். கோபம் வந்தால் நல்லதாக இருந்தால் கோபிக்க வேண்டும். காமம் வந்தாலும் நல்லதாக இருந்தால் வரவேண்டியதுதான். நல்லதற்காக எது வந்தாலும் வரவேண்டியதுதான். இல்லாவிட்டால் வெம்பிவிடும். புளிப்பு இருக்க வேண்டிய சமயத்தில் புளிக்க வேண்டும். துவர்பு இருக்க வேண்டிய சமயத்தில் துவர்க்க வேண்டும். நாமாகப் போய் மோக்ஷத்தைத் தேட வேண்டும். ஞானத்தைத் தேட வேண்டாம். எந்தக் காலத்திலே எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருந்தால் தானாக வந்துவிடும். அப்படி இல்லாமல் முயற்சி செய்தால் பிஞ்சிலே பழுத்த மாதிரிதான். நம் கடமைகளைச் செய்து வஜ்ரம் மாதிரி இருக்க வேண்டும்.

திருமழப்பாடி என்று ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது, அங்கே பரமேச்வரனுக்கு வஜ்ர ஸ்தம்பேச்வர் என்று பெயர், தேவாரத்தில் "வயிரத் தூணே! மாணிக்கமே!" என்று பாடியிருக்கிறது. அதனால் நாம் ஞானத்தைத் தேடிப்போக வேண்டாம். இந்த ஜன்மத்திலே வரவில்லையென்றால் எத்தனை ஜன்மம் கழித்தாவது வரட்டும். அதனால் நம் கடமைகளைச் செய்துகொண்டிருப்போம் நிறையத் தர்மத்தை அநுஷ்டானம் பண்ணவேண்டும் காமமே இல்லையென்றால் பிரபஞ்சம் எப்படி இருக்கும்? முதலில் பகவான் ஸனகாதிகளைச் சிருஷ்டி பண்ணினார். அவர்களும் அப்படியே உட்கார்ந்திருந்தார்கள். அதனால் பிரபஞ்சமும் சிருஷ்டியாகவில்லை. 'பிரபஞ்சம் சிருஷ்டியானால் என்ன? சிருஷ்டியாகா விட்டால் என்ன?' என்று ஒரு சந்தேகம் வரும் பிரளயத்தில் எத்தனையோ ஜீவன்கள் காத்துக் கொண்டிருக்கின்றன. அநாதியாக இருக்கின்றன. அவைகளுக்கு விடுதலை தர வேண்டும், அப்படி ஸனகாதிகள் உட்கார்ந்துகொண்டிருந்தால் பிரபஞ்சம் எப்படிச் சிருஷ்டியாகும்? அதனால்தான் காமம் என்று ஒன்றை ஏற்படுத்தினார். கோபம், துவேஷம், அவமானம், பாபம் எல்லாம் அந்தக் காமம்

என்ற ஒன்றுல் தான் ஏற்படுகின்றன. அப்பிடி இவ்வளவு கஷ்டம் இருந்தாலும் கடவுள் என்ற ஒன்று இல்லை என்றுல் நினைத்த மாத்திரத்தில் சாந்தி தரும் மகான்களான ஒரு சுகாசார்யாரோ, ஒரு வியாஸாசார்யாரோ, ஒரு வால்மீகியோ ஏற்பட்டிருக்க முடியாது. உற்பத்தி என்று இருந்தால் காமம் இருந்துதான் ஆகவேண்டும். முதல் சிருஷ்டியோடு இருந்தால் மற்ற ஜீவன்கள் கடைத்தேற முடியாது. ஏதோ ஒரு தப்புச் செய்தால் அதனுல் ஒரு சாபம் ஏற்பட்டதால் மற்றவர்கள் அதைப் பார்த்துத் தப்புச் செய்யாமல் இருப்பார்கள்.

'அவனுக்கு நல்ல குணங்கள் இருக்கின்றனவே. நமக்கு அவை வரவேண்டும்' என்று ஆசையைப்பட வேண்டும். ஒருவனை அசூயையால் கெடுக்கக் கூடாது. எல்லாம் நல்லதற்குத்தான். பிரயோஜனம் இல்லாத பொருள் ஒன்றும் கிடையாது. எல்லாம் பிரயோஜனம் உள்ளதுதான். நாக்குக்குள்ள ஷட்ரஸத்திலே மதுரந்தான் உயர்ந்தது. அதுபோல நவரஸங்களிலே சாந்தி தான் உயர்ந்தது. சாந்தியும் மதுரமும் ஒன்று. அதனுலேயே 'சாந்தி மதுரம், சாந்த மதுரம்' என்று சொல்லியிருக்கிறது. உலகத்தில் எவ்வளவோ கஷ்டங்கள் வருகின்றன. அல்பாயுஸிலே சாகின்றவனைப் பார்த்துச் சீக்கிரம் சாகிருனே என்று நினைக்கிருேம், தீர்க்காயுஸாக இருப்பவன், 'இவ்வளவு பேரும் போய் நாம் இருக்கின்ருேமே!' என்று நினைக்கிருன். எது வந்தாலும் வரட்டும், நம் கடமையைச் செய்துகொண்டிருக்க வேண்டும். செடிக்கு மதுரமும், சித்தத்துக்குச் சாந்தமுமே பழங்கள். நம் கடமையைச் செய்யாவிட்டால் நமக்குப் பதிதன் என்று பெயர். பதிதன் என்றுல் சறுக்கினவன் என்று அர்த்தம். சறுக்கு மரம் ஏறினுல் வழுக்கி வழுக்கித்தான் விடும், இப்படிப் பல பேர் வழுக்கி வழுக்கி விழுந்தால் ஒருவன் தான் ஜயிப்பான். சறுக்குகிறதே என்பதற்காக ஏருமல் இருக்கக்கூடாது. பதிதனுக நாம் இருந்தால்தான் பதிதபாவனன் (பகவான்) இருக்கிருன் என்ற நம்பிக்கை வரும். பதிதனுக நாம் இல்லாவிட்டால் பாவனன் என்று ஒருத்தன் நமக்கு எதற்கு? அதனுல் சம்சாரத்தில் சாரம் நிறைய இருக்கின்றது. நாம் எல்லாரும் நம் கடமைகளைச் சரியாகச் செய்தால் தானுகவே ஞானம் வந்து சாந்தி ஏற்படும்.

அடிக்கடி நான் செளந்தர்ய லஹரியைப் பற்றியும், ஸ்ரீ ஆசார்யரைப் பற்றியும் கூறி வருகிறேன். செளந்தர்ய லஹரியில் நூறு ச்லோகங்கள் உள்ளன, இதில் நாற்பத்திரண்டாவது ச்லோகத்திலிருந்து அம்பாளைப் பற்றி வர்ணிக்கிருர். அம்பாளின் கிரீடம், தேகம், லலாடம், முன் நெற்றி மயிர், நெற்றி, புருவம் ஆகிய ஒவ்வொன்றையும் பற்றி மிக அழகாகக் கூறியுள்ளார், செளந்தர்ய லஹரி என்றுல் அழகுப் பிரவாகம் என்று அர்த்தம், அம்பாள் நேராகத் தரிசனம் தந்தால் ஆசார்யர் எப்படி ஆனந்தத்தில் திளைப்பாரோ அந்தகைய ஆனந்தத்துடன் செளந்தர்ய லஹரியை இயற்றியுள்ளார். சிற்பி தன்னுடைய சிற்பத்திறன் முழுவதையும் பகவானுக்கு அர்ப்பணிக்கிருன். அதுபோல மகாகவி தம் வாக்கினுல் எழுத்துக்களைத் தொடுத்துப் பதங்களாக்கி, அதில் நவரசங்களைப் புகுத்தி. அதை, ச்லோகமாக்கி அதைப் படிக்கும் மக்கள் படிக்கப் படிக்கச் சுவை குன்றுது இருக்கும் படி, செளந்தர்ய லஹரியை அமைத்துள்ளார்.

அப்பேர்ப்பட்ட மகாகவி ஆசார்யர். அவர் வெறும் கவி மட்டுமல்ல; அருளும் நிறைந்தவர். ஆகவே அருட்கவியாவார். ஆசாரியரவர்களின் தரிசனத்தால் உலகம் க்ஷேமமடையும். அவரைத் தரிசனம் பண்ணும் பாக்கியம் உலக மக்களுக்கு முப்பத்

திரண்டு வருஷங்கள்தான் கிடைத்தது. ஆனால் உலகம் உள்ளவரையில் அழியாத சிறந்த கவிதைகளை அவர் இற்றியதன் மூலம் என்றும் தம்முடைய உருவம் மக்களின் மனக்கண்முன் நிலைபெறச் செய்து விட்டார், அவருடைய கவிதைகளை எல்லோரும் படிக்க வேண்டும், கேட்க வேண்டும்.



என்னை எல்லோரும் புஷ்பங்களால் அலங்காரம் செய்கிறார்கள் நான் என்ன செய்வேன்? நான் உடனே ச்லோகங்களால் பகவானை அலங்காரம் பண்ணவேண்டியது தான். சௌந்தர்ய லஹரியிலிருந்து இரண்டு ச்லோகங்களைக் கூறி அதன் பொருளை இப்பொழுது விளக்குகிறேன். ஒரு ச்லோகத்தில் ஆசார்யர் அம்பாளின் நெற்றியைப்பற்றி வேடிக்கையாகவும் அழகுறவும் கூறியுள்ளார். "அம்பாள் தலையில் கிரீடத்தை அணிந்துள்ளாள். அதில் பிறைச்சந்திரன் இருக்கிறது. அம்பாளின் நெற்றியும் பிறைச்சந்திரனைப் போல் உள்ளது. இவ்விரண்டினையும் ஒன்றை நோக்கி ஒன்று இருக்கும்படி அமைத்தால் முழுச் சந்திரனாகியப் பூரண சந்திரனாக விளங்குவதைக் காணலாம்" என்று கூறியுள்ளார்.

ஆசார்யர் அம்பாளை நோக்கி, "உன் புருவத்தைப் பார்க்கிறேன். அது சற்று வளைந்திருப்பதுபோல் தோன்றுகிறது. அதோடு நெளிந்திருக்கிறுப்போல் இருக்கிறது. மனத்தில் ஏதேனும் கவலை இருந்தால் உடனே புருவம் வளையும். உன் மனத்தில் ஏதோ எண்ணமும் கவலையும் கொண்டிருக்கிறாய். அதனால்தான் உன் புருவம் வளைந்தும் இருக்கிறது. உனக்கு உலகத்தைப்பற்றி. ஏதோ கவலை மனத்தில் ஏற்பட்டுள்ளது" என்று கூறியுள்ளார்.

அழகான பொருளுக்கு மன்மதன் என்று பெயர். பொதுவாக அழகுக்கு மன்மதன் என்று பெயர். அம்பாளின் புருவத்தைப் பார்த்தால் மன்மதன் கையிலுள்ள வில்லோ என்று தோன்றுகிறது. அம்பாளின் புருவம் சாதாரணமானதல்ல. அது உலகமெல்லாம் கண்டு மயங்கும் வண்ணம் இருக்கிறது. அது மன்மதனின் வில்லாகும். மன்மதனுடைய வில்லுக்கு அடங்காதவர் இல்லை. அவனுடைய அழகில் மயங்காதவர் இல்லை மன்மதனுடைய வில்லானால் அது ஒன்று தானே ? ஆனால் இங்கு இரண்டு உள்ளனவே. அதோடு மட்டுமல்ல. இந்த வில்லுக்கு நாணைக் காணவில்லையே என்ற சந்தேகம் உண்டாகும். மன்மதனின் வில் கரும்பு வில். அதற்குக் கருப்பு நாண் உள்ளது. வில் இருக்கிறதே, நாண்கயிறு உண்டா என்றால் நாண்கயிறு உண்டு. அது எதனால் ஆனது என்றால் வண்டுகளால் ஆனது. வண்டுகள் ஒன்றையொன்று தொடர்ச்சியாகப் பிடித்துக்கொண்டு மன்மதனின் கரும்பு வில்லுக்கு நாண்கயிறாக அமைந்துள்ளன. அம்பாளுக்கும் அப்படியே தான். அம்பாளின் புருவந்தான் வில். அவளுடைய அருளால் தான் மன்மதன் மீண்டும் உயிர் பெற்று, அவளால் உயிர்ப்பிக்கப்பட்டதனால் சகல தேஜஸ்களையும் அடைந்தான். அம்பாளின் வில்லின் நாண் அவளுடைய கண்களா



கும். கண்களாகிய வண்டுகள் நாணுக அமைந்துள்ளன.

அம்பாளுக்கும் மன்மதனுக்கும் ஒரே மாதிரியுள்ள வில்லையும் நாண் கயிற்றையும் கண்டோம். ஆனுல், ' அம்பாளுடைய வில் நடுவில் இரண்டாகப் பிரிந்திருக்கிறதே, என்ன காரணம்? ' என்ற சந்தேகம் எழலாம். அம்பாளின் இரு புருவங்களுக்கிடையில் இடைவெளி உள்ளது. அதன் காரணம் யாது ? அதுவும் ஒன்றுதான். எப்படி என்று கேட்கிறீர்கள். மன்மதன் தன் இடக் கையில் வில்லைப் பிடித்துக் கொண்டிருக்கிறுன். வலக் கையினுல் அம்பைப் பிடித்துக் கொண்டிருக்கிறுன், அப்போது இடக்கை முஷ்டியினுல் வில்லின் நடுப்பாகம் மறைக்கப்பட்ட்டது. அதே சமயம் மணிக்கட்டினுல் நாணின் நடுப்பாகம் மறைக்கப்பட்டது. ஆகவெ தான் ஒரே வில்லாகவும் ஒரே நாணுகவும் இல்லாமல் நடுவில் பிரிந்திருக்கிறது என்று ஆசார்யர் கூறியுள்ளார்.

உலகத்தைக் காப்பது தாயின் கடமை. ஆகவே தான் லோகமாதாவான அம்பாளின் புருவம் எப்பொழுதும் வளைந்து அம்பை எய்வதற்குத் தயாராக உள்ளது என்று ஆசார்யர் கூறியுள்ளார். வில், நாண் இரண்டையும் பார்த்தோம். அம்பு இல்லையா என்றால் மன்மதனுக்கு எப்பொழுதும் புஷ்பத்தாலான அம்புதான் உண்டு. அந்த அம்பு, பஞ்ச புஷ்பங்களால் ஆனது. அவை தாமரை, மல்லிகை, கருநீல புஷ்பம், மாம்பூ, அசோக புஷ்பம் ஆகியவை. வில்லோ கரும்பு ; நாணே வண்டுகள் ; அம்போ புஷ்பம். இவைகளை வைத்துக்கொண்டு உலகம் முழுக்கத் தன் காலடியில் விழச்செய்



தான் மன்மதன். இது அம்பாளின் அருளா லன்றி வேறு எவ்விதம் சாத்தியம் ? எல்லா இந்திரியங்களையும் அம்பாளின் வசமாக்க வேண்டும். ரசம், மனம், ஸ்பரிசம் ஆகியவற் ருல் மூன்று இந்திரியங்களையும் திருப்தி அடையச் செய்வது புஷ்பம். வண்டு புஷ் பத்திலிருந்து தான் நமக்குத தேனை எடுத் துத் தருகிறது. நாக்குக்கும், வாசனைக்கும் தொடு உணர்ச்சிக்கும் கட்டுப்படாத உல கம் இல்லை. எல்லாம் அதில் அடங்கிவிடும். ஆகவே அம்பாள் கையில் எப்பொழுதும் வில் அம்பு இருக்கும்.

நாம் அலங்காரம் செய்துகொண்டால் நமக்கு அகம்பாவம் உண்டாகிறது. ஆனல் அதே அலங்காரத்தை அம்பாளுக்குச் செய் தால் பாவம் தொலையும். எல்லாவற்றிலும் நிறைந்தது ஸ்வாமி. எல்லா அலங்காரமும் அம்பாளுக்குப் போடுவதால் நகைகளும் அழகு பெறுகின்றன. இவ்வாறு ஆசாரியர் ஒவ்வொரு ச்லோகத்திலும் அம்பாளைப் பற்றிக் கூறியுள்ளார்.

இதற்கு அடுத்த ச்லோகத்தில், " அம்பா ளுக்கு நெற்றியில் ஓர் கண் இருக்கிறது " என்று கூறியுள்ளார். அது எப்பொழுதும் சிவப்பாக இருக்கிறது. அதற்கு அதிக நய னம் என்று பெயர். " அம்பாளின் கண்கள், காதுகள் வரை நீண்டிருக்கின்றன. அவ் விரு கண்களும் காதாகிய ரசிகனிடத்தில் விளையாடிக்கொண்டிருக்கின்றன. அதைக் கண்ட நெற்றிக் கண் எப்பொழுதும் கோபத்துடன் சிவப்பாகவே இருக்கும் " என்று கூறுகிருர்.

ஆசார்யர் அம்பாளை நோக்கி, " எனக்கு ஒரு வரம் அருள்வாய். உன்னுடைய கடா

க்ஷம் மிகவும் நீண்டது. நான் எல்லாவற்றிலும் கடைசியில் உள்ளேன். எப்படிச் சந்திரனின் ஒளி மாடமாளிகைகளைப் பிரகாசிக்கச் செய்வது போல முட்புதர்களையும் பிரகாசிக்கச் செய்கிறதோ, அப்படி, எளியவனை என்மீதும் உன் கடாக்ஷத்தை அருள்வாய் " என்று வேண்டுகிறார்.

ஆகவே எல்லா அலங்காரத்தைக் காட்டிலும் அம்பாளின் கருணை அதைவிடச் சிறந்த அலங்காரம் இல்லை. அம்பாளின் கருணை பெற்றவர் முகமே மிக்க அழகுடன் விளங்கும். இருதயத்திலிருக்கும் பரதேவதையின் கடாக்ஷம் இருந்தால் நமக்கு என்றும் ஆனந்தம் தரும். ஆகவே அவளைச் சரணடைவதே சிறந்த வழி. நாம் எப்போதும் நன்றாகவும் அழகாகவும் இருக்க நமது உள்ளம் தூயதாக இருக்க வேண்டும் அப்போது தான் நம்மை எல்லோரும் வாழ்த்துவர். ஆகவே அம்பாளின் பாத கமலங்கள் நமது இருதயத்தில் இருந்தால் அதுவே நமக்குச் சிறந்த பாக்கியமாகும். உலகம் முழுவதும் ஒரே பரமாத்மா தான். அவரே எல்லா உயிர்களுமாவார். ஆகவே இருதயத்தில் கருணையை அளித்து நம்மை உய்விக்கும் பொருட்டு உங்களுக்கெல்லாம் அருள்புரிய அம்பாள் கருணை புரிவாளாக.

ரிக்வேதம், சுக்ல யஜுர்வேதம், கிருஷ்ண யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வண வேதம் — இவ்வேதங்களின் சாகைகளுள் ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் உபநிஷத்தை அத்யயனம் செய்து, அதன் பொருளைத் தெரிந்துகொண்டு, இந்த ஜன்மத்துக்குள் பரமாத்ம ஸாக்ஷாத்கார அநுபவத்தைப் பெற வேண்டும். நாம் எல்லோரும் உபநிஷத்துக்களின் பொருளை அறிந்து அநுபவிக்கப் பரம உபகாரம் செய்தருளிய குருநாதர் ஸ்ரீ ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகள். அவர்களுடைய தெளிவான பாஷ்யமாகிற வெளிச்சத்தைக் கொண்டு நமது வேத சாகையின் உபநிஷத்தையாவது நாம் அறிந்து அநுபவிப்பது ஒன்றே இந்த மானிடப் பிறவியின் இறுதிப்பயன், குருநாதரின் அருளால் நாம் இந்தப் பெரும் பயனை அடைந்து உய்வோமாக.

சம்புவினுடைய நடக்கும் மூர்த்தியே ஸ்ரீ சங்கராச்சார்யார்கள். 'சம்' என்பதற்கு நித்திய சுகம் என்பது அர்த்தம். 'பூ' -உற்பத்தியாகிற இடம். ஊற்று உற்பத்தியாகிறது என்றால் ஜலம் வேண்டியவர்கள் அங்கே போய் எடுத்துக் கொள்ள வேண்டும், 'சம்பு' சம் உண்டாகிற இடம். சம்புவாக இருந்தால் இந்த யுகத்துக்குப் போதாது. அந்தச் சுகத்தைக் கையிலெடுத்து எல்லோருக்கும் கொடுக்க வேண்டும். 'சம்'மைச் செய்ய வேண்டும். கையில் எடுத்துக் கொடுத்தால்கூட வேண்டாம் என்பவர்கள் இருக்கிறார்கள். அதனால் சம்புவாகிய உட்கார்ந்த மூர்த்தி கூடாது. சங்கரர் சுற்றும் மூர்த்தி அதுதான் இப்பொழுது வேண்டும்.

சிலர், 'சம்' என்ற சொல் ஐந்தைக் குறிக்கிறது என்றும், 'ர' என்பது இரண்டைக் குறிக்கிறது என்றும், 'க' ஒன்றைக் குறிக்கிறது என்றும் கூறி ஆசார்யரின் அவதார மாதம், பக்ஷம், திதி இவற்றை அநுசரித்து இப்பெயர் வைக்கப்பட்டதெனக் கருதுகிறார்கள்; அதாவது 'ச' என்பது பஞ்சமி திதியையும் 'க' என்பது முதல் பக்ஷமாகிய சுக்ல பக்ஷத்தையும், 'ர' என்பது இரண்டாவது மாதமாகிய வைசாக மாதத்தையும் குறிப்பதாகச் சொல்வார்கள்.

ஸ்ரீ ஆதி சங்கரரின் திருவாக்கிலிருந்து வெளிவந்த ஸ்தோத்திரங்களில் ஒன்றையாவது நமது வாக்கினால் சொல்லி, அன்னாரின் திருவடிகளில் ஸமர்ப்பணம் செய்ய வேண்டும்.

---




ஸ்ரீ சங்கர பகவத்பாதர் இந்தப் பரந்த பாரத பூமியில் எல்லாவற்றையுமே கருணையுள்ளத்தால் அளிக்கும் ஓர் மகத்தான கல்ப விருக்ஷம். சங்கரராகிய கல்ப விருக்ஷம் வேரூன்றி நிற்கும் இடம் பூமியின் நாபிஸ்தானமான ஸ்ரீ காஞ்சி நகரம். இது பழைய சங்கர விஜயங்களிலிருந்து தெரிய வரும் உண்மை. நான்கு திக்குகளிலுமுள்ள நான்கு சிஷ்யக் கூட்டங்களை சங்கரராகிய மகத்தான விருக்ஷத்திற்கு நான்கு புறத்திலும் ஏற்பட்ட நான்கு ஸ்கந்தங்கள். நான்கு திக்குகளிலுமுள்ள சங்கரருடைய நான்கு சிஷ்யக் கூட்டங்களை நான்கு ஆம்னாயங்களென்று பழைய சங்கர விஜய புஸ்தகங்களில் கூறப்பட்டிருக்கிறது.

காஞ்சியில் தங்கிய ஸ்ரீ சங்கரரின் சிஷ்ய பரம்பரையே மூலாம்னாயமென்றும், மத்யாம்னாயமென்றும் பழைய சங்கர விஜயங்களில் ஸ்பஷ்டம். இவ்விதமான பெருமை வாய்ந்த ஸ்ரீ சங்கரரென்ற கல்ப விருக்ஷத்தை ஸ்ரீ சங்கர ஜயந்தி புண்ய காலத்தில் துவிஜர்களாகிய பக்ஷிகள் போன்ற நாம் எல்லோரும் ஸேவித்து ஸகல தாபங்களையும் போக்கி பேரானந்த மடைவோமாக.

பாலம்நிமான் ம்ருகமரீசிகயா பராச: காமாக்ஷசாரகுடகான் ப்ரதிந்த்யமோகான் ।
ஆத்மோன்முகான் கலயஸே தயமானலீலா காமாக்ஷி தேவி லலிதே தவ ஸுப்ர
பாதம் ॥
அத்வைத தர்சன மஹாபததீபிகாயா: ஸ்ரீ காமகோடி குருபீட பரம்பராயா: ।
ஆத்யஸ்ய சங்கர குரோ: ஹ்ருதி லப்தநிஷ்டா வித்யாமயி விஜயஸே தவ ஸுப்ர
பாதம் ॥

ஸ்ரீ காமாக்ஷி தேவி உலகிலுள்ள புண்யாத்மாக்களுக்கு பூர்ண நிலவுபோல் எல்லாவற்றையும் அருள் புரிகிறாள்.

(கி. நாகராஜன், சென்னை - 6.)



# ஸ்ரீ காமகோடி ஆசார்யாள்

(ஞானபாஸ்கர P. N. நாராயண சாஸ்திரிகள்)

கலி பிறந்து 3000 வருஷங்களுக்குப் பிறகு உலகில், அதிலும் பாரத தேசத்தில், வைதிகமான ஆஸ்திக மதத்திற்கு, குறைவும் நாஸ்திகத்திற்கு விருத்தியும் அதர்மமும் பரவி நின்றது. அப்பொழுது தேவர்களின் ப்ரார்த்தனைக்கிணங்க கைலாஸ வாஸியான பரமேச்வரன் காலடியில் சிவகுரு, ஆர்யாம்பிகை தம்பதிகளுக்கு ஆதிசங்கரராய் அவதரித்தார்.

ஆதிசங்கரர் காலடியில் அவதரித்து திக்விஜயம் செய்து காஞ்சியில் அம்பாள் ஸன்னிதியில், மஹாஸாம்ராஜ்யம் எனப்படும் காமகோடி பீட ஸ்ரீ சக்ரத்தை உலக க்ஷேமத்திற்காக தனக்குப் பிறகு, தன் அடுத்த சிஷ்யரான ஸுரேஸ்வரரை



அங்கு நியமித்து அங்கேயே ஸர்வஜ்ஞ பீடமேறி ஸகல உலக க்ஷேமத்திற்காக, பாடுபட்டு அம்பாள் ஸன்னிதியிலேயே பரம்பொருளில் கலந்தார் என்று, மார்க்கண்டேய ஸம்ஹிதையும் ப்ருஹத் சங்கர விஜயமும் கூறுகின்றன. இப்படி சிறப்புற்று விளங்குகின்ற காஞ்சி க்ஷேத்திரம் காமாக்ஷி ஸன்னிதியில் ஆதிசங்கர பகவத் பாதர்களால் ஸ்தாபிக்கப்பட்டு, பிறகு ஸுரேஸ்வரரும் பிறகு தலைமுறை விட்டுப் போகாமல், காமகோடி பீட குரு பரம்பரை வந்து கொண்டிருக்கிறது. அதில் பல மஹான்கள் உலகப்புகழ் பெற்று தெய்வமே ஆனவர்களும் உண்டு. காஞ்சியில் காயாரோஹணம் என்னும் இடத்தில், தபஸ் செய்து ஈடுபட்டு ஸமாதியில் இருந்த இரு காமகோடி ஆசார்யாள், அங்கு சிவலிங்கமேயாகி விட்டார்கள். அதுதான் இப்பொழுது "காயாதி ரோஹணேஸ்வரர்" என்று இன்றும் வழங்குகிறது. அம்மாதிரி புகழ் பெற்று விளங்கும் காமகோடி பீடத்தில் 68-வது ஆசார்ய பரம்பரையாக இப்பொழுது நாம் கண்டுகளிக்கும், பரமாசார்யாள் ஸ்ரீ சந்திர சேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்ரீபாதர்கள் ஸாம்ராஜ்யசக்ரவர்த்தியாய் விளங்குகிறார்கள். ஆதிசங்கரரையும், அதற்குப் பிறகு வந்த பீடாதிபதிகளையோ பார்க்கமுடியாத நம் தலைமுறையினர், இன்று ஸ்ரீ பெரியவாளை தரிசனம் செய்வதாலேயே ஆதிசங்கரருடையவும் மற்றும் பீடாதிபதிகளுடையவும் மஹிமாதிசயங்களை ஓரளவு தெரிந்து கொள்ள

முடிகிறது. ஆதி ஆசார்யாள் செய்த லோக க்ஷேமகரமான கார்யங்களை புஸ்தக மூலமாய்த் தெரிந்து கொள்ளுகிறோம். அதே தர்மஸ்தாபன கார்யங்களை இப்பொழுது நம் நடமாடும் தெய்வமான பரமாசார்யாள் நேரில் நடத்தி வருவதைப் பார்க்கிறோம்.

ஆதிசங்கரர் நடத்திய கார்யங்களில்

| | |
|---|---|
| தர்மஸ்தாபனத்திற்கு | வேததர்ம சாஸ்திர பரிபாலன ஸபை. வேத ரக்ஷண நிதி. |
| ஷண் த ஸ்தாபனத்திற்கு | திருப்பாவை-திருவெம்பாவை மறை ஆறங்க மாநாடு. |
| அத்வைத ஸித்தாந்தத்திற்கு | அத்வைத ஸபை. |
| பல கலைகளும் வளர | வ்யாஸ பாரத ஆகம சில்ப ஸதஸ். |

வேதம் எத்தனை சாகை என்று நாம் அறிந்து கொள்ளாத சமயத்தில் "ஸர்வ சாகா வேத ஸம்மேளனம்" நடத்தியதிலிருந்தே, கடவுள் அவதாரம்தான் இதெல்லாம் செய்யமுடியும் என்பது ஸித்தம். தாடங்க ப்ரதிஷ்டை, பல ஆலய கும்பாபிஷேகங்கள், ஜீர்ணோத்தாரணம், தர்மரக்ஷணம், ஜீவாத்ம கைங்கர்யம், மற்றும் நமது மதத்திற்கு நம்மவராலேயேயும் பிற மதத்தினராலும் அவ்வப்பொழுது ஏற்பட்டு வரும், சிரமங்களை நிவர்த்தி செய்யப் பாடுபடும் நடமாடும் தெய்வம் நமது பரமாசார்ய மூர்த்திதான். விவரித்தால், இந்தக் கட்டுரை பெரிதாகிவிடும். ஈச்வரன், குரு, சிஷ்யன் மூன்றும் ஒன்றே என்னும் சாஸ்திரப்படி நமது ஆசார்யாள் நடமாடும் தெய்வமாயும், குருவாயும், நம் எல்லோர் உள்ளத்திலும் வீற்றிருப்பதால், நம் எல்லோருமாயும் விளங்குவதினால் ஆதி குரு, தக்ஷிணா மூர்த்தியாயும், ஆதிசங்கரராயும் விளங்குகிறார் என்பது என்னுடைய நிச்சயமான எண்ணம்.

அந்த பரமாசார்யாள் அவதார ஸ்தலமான விழுப்புரத்தில் அவர்களுடைய 77-வது ஜயந்தியை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸேவா ஸமாஜத்தார் சிறந்த முறையில் கொண்டாட முன் வந்துள்ளனர். 'விழுப்புரத்தில் 77-வது ஜயந்தி' என்னும் நூலையும் வெளியிடுகின்றனர். அவர்களுடைய அரிய தொண்டையும் முயற்சியையும் மிகவும் பாராட்டுவதுடன் நம் பரமாசார்யாள் நம்மிடையே இன்னும் பல ஆண்டுகள் வாழ்ந்து, ஸமாஜத்தாருக்கும் மற்றும் எல்லோருக்கும் அருள்புரியப் ப்ரார்த்திப்பதுடன், எனக்கு இதை எழுத வாய்ப்பளித்த நிர்வாகிகளுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஸ்ரீ பெரியவாளுடைய புகழை உலகமறியச் செய்ய மூலகாரணமாயுள்ள அவர்களின் முக்ய சிஷ்யர்களில்



ஸ்ரீமத் பரமஹம்ஸ ஜயேந்திர ஸரஸ்வதி புதுப்பெரியவாள் ஸன்னிதியில் வந்தனங்களையும் ஸமர்ப்பித்துக் கொள்ளுகிறேன்.

சுபம்.

# காலையில் எழுந்தவுடன் கீழ்க்கண்டவைகளை மனதில் ஞாபகம் வை

1. தெய்வமிகழேல்.
2. நீறில்லா நெற்றி பாழ்.
3. அரனை மறவேல்.
4. ஆலயந் தொழுவது சாலவும் நன்று.
5. ஆட்டுக்குட்டி சித்தர் சொல்லுகிறார்.
   ஆடு காண் போகுதுபார் போகுதுபார்.

[ ஆடு = கங்கையில் நீராடு; காண் = ராமேஸ்வரத்தில் சேதுவைக் காண்; போகுது பார் = பாபங்களெல்லாம் தானகவே பறந்து போகின்றன. ]

6. காணுமற் கோணுமற் கண்டு கொடு.
7. கோயிலையும் குளத்தையும் மறவாதே.
8. குருடன் யார்? (படித்திருந்தும் கெட்ட காரியம் செய்பவன்.)
9. செவிடன் யார்? (ஹிதத்தைக் கேட்காதவன்.)
10. ஊமை யார்? (இனிமையான வார்த்தைகளைச் சரியான காலத்தில் சொல்ல அறியாதவன்.)
11. விபத்து எவனைத் தீண்டாது? (பெரியோர் வார்த்தையை அனுசரித்து நடப்பவனையும் அடக்கமுள்ளவனையும்.)
12. பிராணனைவிட பிரியமானவை எவை? (குல தர்மமும், ஸாதுக்களின் நட்பும்).
13. இரக்ஷிக்கத் தகுந்தவை எவை? (கீர்த்தியும், கற்புடைப் பெண்டிரும்.)
14. அஹம்பாவம் கொள்ளாதே. எல்லாம் அவன் செயல்.
15. எல்லா நேரங்களிலும் ஆண்டவன் நாமத்தை ஜபி.
   ராம நாமத்தில் திடமான நம்பிக்கை வை.

ராம நாமம் பழுதுபடாத புகலிடமாகவும், கேடயமாகவும் இருந்து கொண்டு எல்லாவகை அச்சங்களினின்றும் காத்து வரும். பயம் தோன்றும் பொழுது ராம நாம மென்கிற மருந்தை உட்கொள்.

ராம நாமம் நமக்கு நாமே வைத்தியராகவும் நோயைப் போக்கும் அமுதை நம் உள்ளத்திலிருந்தே பெறவும் உதவுகிறது.

மன நிம்மதியைப் பெற ராம நாமத்தை நம்பிக்கையுடன் ஜபி.

மனவொருமையுடன் ராம நாமத்தை ஜபி. ஒப்பற்ற ஒரு சக்தியினின்று உதவி பெறுவது நிச்சயம்.

ராம நாமத்துடன் ஒப்பிடும் பொழுது அணுகுண்டின் சக்தி ஒரு சக்தியே அல்ல என்பதை அறியலாம்.

---

அருள்வாக்கு: "ஒவ்வொரு ஹிந்துவும் தினமும் 100 முறையாவது ராம நாமத்தை உச்சரிக்க வேண்டும். காந்திஜி ராம நாமத்தை ஜபித்து சுயராஜ்யம் வாங்கிக் கொடுத்தார்".



# நாம் காணும் சங்கரர்

(பத்ம பூஷண்
ஸ்ரீ T. S. ராமஸ்வாமி அய்யர்)

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் பூஜ்ய ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் பரம்பரையில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தை அறுபத்தெட்டாவது ஆசார்யாளாக லோக க்ஷேமார்த்தம் சிறப்புடன் அலங்கரித்து வருகிறார்கள். நம்முடைய பெரியவர்கள் அவதரித்த ஸ்தலம் விழுப்புரம். அவர்களுடைய மாதா பிதாக்கள் அவர்களுக்கு ஸ்வாமிநாதன் என நாமகரணம் செய்து வைத்தார்கள். ஸர்வாத்மாவான பகவானுடைய ஸங்கல்பப்படி அவர்களுடைய இளம்பிராயமான 12 வயதிலேயே ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி என்ற திவ்ய நாமத்துடன் அவர்கள் ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளாக ஸ்தாபிக்கப்பட்டார்கள். கடந்த 64 ஆண்டுகளாக நம் ஸ்வாமிகள் ஸ்ரீ சந்திரமௌளீஸ்வரருக்கு பூஜை செய்து வருகிறார்கள். ஸ்வாமிகள் தபஸ் ஞானம், நியமம், கருணை இவைகளின் உருவமாகவே மக்களிடையே உலாவி வருகிறார்கள். ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் காலடியில் அவதரித்து பாரத தேசம் முழுவதும் பாதசாரியாகவே ஸஞ்சாரம் செய்து அத்வைத மதத்தை ஸ்தாபித்து உலகில் பிரகாசிக்கச் செய்தார். நம் ஸ்வாமிகளும் விழுப்புரத்தில் அவதரித்து பரதகண்டத்தை பாதசாரியாகவே பூப்பிரதக்ஷிணம் செய்து கொண்டு ஆங்காங்கு அத்வைத மதத்தையும், நம்முடைய பிராசீனமான கர்மானுஷ்டானங்களின் முக்கியத்வத்தையும் ஜனங்களுக்கு நல்லமுறையில் போதித்து வருகிறார்கள். தன்னுடைய தபோ மஹிமையால் ஸூர்யன் போல் ஜ்வலிக்கிறார்கள்.

ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் கனகதாரா ஸ்தோத்ரம் செய்து பொன்மழை வர்ஷிக்க வைத்தது போல, நம் ஸ்வாமிகளுக்கு ஸர்வ ஜனங்களும் ஸர்வ ஐஸ்வரியத்தையும் அடைந்து ஸௌக்கியம் பெற உபதேச மூலமாய் மார்க்கத்தை போதித்து வருகிறார்கள்.

ஸர்வ ஜனங்களும் நலம் பெற அநேக திட்டங்களை ஸ்வாமிகள் தமக்கே உரிய மதியூகத்தினால் வகுத்துக் கொடுத்துள்ளார்கள். வேத ஸம்ரக்ஷணம், கோ ரக்ஷணம், ஆஸ்பத்திரிகளில் அவதியுறும் நோயாளிகளுக்கு ஆறுதல் மொழிகள், பிரசாதம், கங்கா தீர்த்தம் முதலியவை விநியோகம் செய்தல், பஜனை, திவ்ய நாமஸ்மரணம் செய்து வரும்படி அறிவுரை வழங்குதல், நோயாளிகளுடைய ஆரோக்யத்துக்காகவும் மன நிம்மதிக்காகவும் பிரார்த்தனை செய்தல் போன்ற அவர்களுடைய திட்டங்களை விரிவாக எழுதப்புகுந்தால் அது ஓர் புத்தகமாகவே விரிவடையும். ஸ்வாமிகள் தன்னை ஆஸ்ரயித்தவர்களை கங்கா பிரவாகம்போல் தன் அருள் நோக்கால் புனிதம் செய்து இஹ பர லோக க்ஷேமங்களை பூர்ணமாக வழங்கி வருகிறார்கள். ஸ்ரீ ஸ்வாமிகளின் அருள் வாக்குகளை படித்து நன்றாக மனனம் செய்தவர்களுக்கு ஸர்வசாஸ்திரங்களின் உட்கருத்தும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கும். அவர்களே சாஸ்திரங்கள் தான். நம் ஸ்வாமிகளின் ஜன்ம தினம் இவ்வருஷம் 21—5—'70ல் வருகிறது. இந்தப் புனித தினமானது இவ்வருஷமும் இன்னும் வரப்போகும் பல ஆண்டுகளிலும் சிறப்புடன் மஹோத்ஸவமாகக் கொண்டாடப்படும்.

குழந்தைகளும் உணர்ந்துகொள்ளும்படி ஜனங்கள நம் ஸ்வாமிகளுக்கு இட்டுள்ள 'பெரியவாள்' என்னும் பெயரே ஜனங்களுக்கு அவர்களிடம் ஏற்பட்டுள்ள பெரு மதிப்பையும், அன்பையும் பக்தியையும், ஈடுபாட்டையும் நன்றாகக் காட்டுகிறது.



ஸ்ரீ வால்மீகி பகவான் ஸ்ரீ ராமரைக் குறிப்பிடும் போது ராமோ விக்ரஹவான் தர்ம: என்று சொல்கிறார்கள். இந்த வாக்கியமானது தற்காலம் நம் பெரியவாளுக்கு முற்றும் பொருந்தும்.

விழுப்புரத்தில் ஸ்ரீ ஆசார்யாளின் ஜனன க்ருஹத்தை ஸ்ரீ மடமாக ஸ்தாபித்து நிர்வாகம் செய்து வரும் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீ ராமபிரானுடைய பிராதாக்களான லக்ஷ்மணரும் பரதரும் சத்ருக்னரும் சேர்ந்து ஒரே மூர்த்தியாக நமக்கு காக்ஷி கொடுக்கிறார்கள்.

நாம் யாவரும் ஸ்ரீ சங்கர பகவத் பாதாளையும், நம் பெரியவாளையும் அவர்களை நம்மிடையே உலவச் செய்துள்ள ஸர்வேசுவரனின் கருணையையும் நினைவுகூர்ந்து தியானித்து இவர்களுக்கு நம் மனப்பூர்வமான பிரணாமங்களை ஸதா செய்து கொண்டிருப்பது நம்முடைய தலைசிறந்த கடமையாகும்.

சுபம்

*With best compliments of:*

HARIKRIPA ENTERPRISES PRIVATE LTD.,

*Registered Office:*

15, Richie Street, Mount Road,
MADRAS - 2.

"ORMO" brand Ammonia Paper, tracing paper, Ammonia Liquor, Other Drawing requisites. "Mew Domestic pumps, Hydraulic Side Lifting jacks for Cars.

*Manufacturers of:*

FRP Crash and construction Helments. Other Safety Equipments: Fibreglass Linings. Engineering & Automobile Components.

*With our pranams to*

*His Holiness*

*Sri Acharya Swamigal of*

*Sri Kanchi Kamakoti Peetah*



Srinivasa Institute of Commerce

16, Ramakrishna Mutt Road,
Mylapore, MADRAS - 4.

*Pranams to*

*His Holiness*

DEVOTEE

WITH OUR PRANAMS TO

HIS HOLINESS

**Sri Ram Radio & Electricals**

Radio Service, Wiring Contracts & Sanitary Works, Etc.

**No. 6, Baghavandam Gupta Street,**
*(Near Hindi Prachar Sabha)*

T. NAGAR | MADRAS-17.

Phone: 442419



# அத்வைத வேதாந்தமும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடமும்

(டாக்டர் வீழிநாதன்,
எம். ஏ., பி. எச். டி.)

ப்ரம்மஸூத்ரத்தை இயற்றி அருளிய ஸ்ரீமந் நாராயணனின் அவதாரமான ஸ்ரீவ்யாஸ பகவானையும். ப்ரம்மஸூத்ரத்திற்கு உரை இயற்றி அருளிய பரமேஸ்வரனின் அவதாரமான ஸ்ரீ பகவத்பாதர்களையும் எப்பொழுதும் நமஸ்கரிக்கின்றேன்.

ஸத்ய ஸ்வரூபமாகவும், ஞானஸ்வரூபமாகவும், ஆனந்த ஸ்வரூபமாகவும் உள்ள இரண்டற்ற ப்ரம்மமானது மாயையின் வசத்தால் ஈஸ்வரனாகவும், ஜீவன்களாகவும், உலகமாகவும் தோற்றமளிக்கிறது. மாயையில் ப்ரதிபலித்த ப்ரம்மமே ஈஸ்வரன் என்று வ்யவஹரிக்கப்படுகிறது, மாயை மூன்று குணங்களையுடையது. அவை ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகும், ஸத்வ குணத்தை ப்ரதானமாகக் கொண்ட மாயையில் ப்ரதிபலிக்கின்ற ப்ரம்மம் ப்ரம்மா என்றும், ரஜோ குணத்தைப்ரதானமாக கொண்ட மாயையில் ப்ரதிபலிக்கின்ற ப்ரம்மம் விஷ்ணு என்றும், தமோ குணத்தை ப்ரதானமாகக் கொண்ட மாயையில் பிரதிபலிக்கின்ற ப்ரம்மம் பரமேஸ்வரன் என்றும் வ்யவஹரிக்கப்படுகின்றது. ஒரே ப்ரம்மம் மாயையின் குணங்களினால் மூன்று விதமாக இவ்வாறு வ்யவஹரிக்கப் படுகிறது என்று மைத்ராயணீ உபநிஷத் கூறுகிறது, ஈஸ்வரன் தனக்கு உபாதியான மாயையைத் தன் வசத்தில் வைத்துக் கொண்டு ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கின்றான். மாயை ஈஸ்வரன் வசத்தில் இருப்பதால், ஈச்வரன் மாயையினால் மோஹத்தை அடைவதில்லை. அதாவது, ஈஸ்வரன் குணமற்றதும், உருவமற்றதுமான ப்ரம்மஸ்வரூபத்தை விட தான் வேறல்ல என்ற ஸாக்ஷாத்காரத்துடன் எப்பொழுதும் இருக்கின்றான். ஆகவே, ஈஸ்வரன் நித்ய முக்தன்.

ஜீவன் என்பதும் வாஸ்தவமாக ப்ரம்மமே. ஆனால் ப்ரம்மம் மாயை, அதனுடைய கார்யமான மனது, தேகம் இவற்றில் ப்ரதிபலிக்கும் போது ஜீவனாகத் தோற்றமளிக்கின்றது. மாயை ஜீவனை வசப்படுத்துகிறது, அதன் வசத்தினால், உண்மையாக ப்ரம்மஸ்வரூபமான ஜீவன் தன்னை மனது, தேகம் இவற்றுடனும், இவைகளின் குணங்களுடன் ஒன்றுபடுத்திக் கொண்டு ஸம்ஸாரத்தை அனுபவிக்கின்றான். இந்த ஸம்ஸார பந்தத்தை அழிக்க ஆத்ம ஞானமே ஸாதனம். அதாவது, ஜீவன்தான் ப்ரம்மத்தைத்

தவிற வேறல்ல என்ற ஸாக்ஷாத்காரத்தைப் பெறவேண்டும். அப்படி அடைந்தால் மாயை அழிய, மாயையின் கார்யமான மனது, தேகம் இவற்றின் தொடர்பும் அழிய ஜீவன் ஸத்ய ஸ்வரூபமானதும், ஞானஸ்வரூப மானதும், ஆனந்தஸ்வரூபமானதுமான ப்ரம்மமாகவே இருக்கின்றான், இதுவே மோக்ஷம்.

மோக்ஷத்திற்கு ஸாதனம் ஆத்ம ஞானமே. ஆத்ம ஞானத்தை வேதாந்த வாக்யங்களை விசாரம் செய்வதன் மூலமே அடைய முடியும். ஜீவன்கள் ஆத்ம ஞானத்தை அடைய, ஸ்ரீ மந் நாராயணன் ஸ்ரீ வேதவ்யாஸராக அவதரித்து வேதாந்த வாக்யங்களை ஸூத்ர உருவமாக இயற்றினார். இதுவே ப்ரம்மஸூத்ரம் என்று கூறப்படுகிறது. ப்ரம்மஸூத்ரங்கள் ஆழ்ந்த கருத்துக்களை கொண்டவை. சுலபமாக புரிந்து கொள்ள முடியாதவை. ஆகவே பரமேஸ்வரன் ஸ்ரீபகவத்பாதர்களாக அவதரித்து எளிய நடையில், ஆனால், ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்ட பாஷ்யத்தை இயற்றினார். பாஷ்யத்தைப் படிக்க அதிகாரமோ, சக்தியோ அற்றவர்களுக்காக வேதாந்த ஸாரத்தை வெளிப்படுத்தி பல ப்ரகரண க்ரந்தங்களை இயற்றியுள்ளார். இவற்றில் தசச்லோகீ என்பது முக்யமானது. இதற்கு மதுஸூதன ஸரஸ்வதீ என்ற ஜீவன் முக்தர் ஸித்தாந்த பிந்து என்ற உரை இயற்றியுள்ளார். அதில் ஆரம்பத்தில் அவர் 'ஸர்வ ஜீவராசிகளையும் நேராகவோ, அல்லது பரம்பரையாகவோ ஆத்ம ஞானத்தை அளிப்பதன் மூலம் ஸம்ஸார பந்தத்திலிருந்து கரையேற்ற எண்ணி தசச்லோகீ என்ற க்ரந்தத்தை பகவான் ஸ்ரீ சங்கரர் இயற்றினார்கள்'' என்று கூறுகிறார்.

வேதாந்த வாக்ய விசாரத்தால் ஆத்ம ஞானத்தை அடைய ஈச்வரானுக்ரஹம் அவச்யம். கலியில் சிவலிங்கத்தை பக்தியுடன் பூஜை செய்தால் ஆத்ம ஞானத்தையடைந்து மோக்ஷத்தைப் பெறலாம்.

பகவத்பாதர்கள் தன் யோக சக்தியினால் ஆகாச மார்க்கத்தில் கைலாஸம் சென்று அங்கு பார்வதீ ஸமேதரான பரமேச்வரனை தர்சனம் செய்து அவரிடமிருந்து ஐந்து ஸ்படிக லிங்கங்களைப் பெற்றுக்கொண்டார். இது விபரம் சிவரஹஸ்யம் என்ற இதிஹாஸத்தில் 16வது அத்யாயத்தில், 9வது அம்சத்தில் கூறப்பட்டுள்ளது.

(Jayachamarajendra Granthamala Series, Vol. 21, No. 32, 1950. P 200)

ஆனால், ஐந்து லிங்கங்களையும் எங்கெங்கு ப்ரதிஷ்டை செய்தார்கள் என்று இந்த க்ரந்தத்தில் குறிப்பிடவில்லை. ஆனந்தகிரி இயற்றிய மிகவும் ப்ராமாணிகமான சங்கர விஜயத்தில் லிங்கங்களை ப்ரதிஷ்டை செய்த விவரம் கூறப்பட்டுள்ளது.

தஞ்சாவூர் ஸரஸ்வதீ மஹால் லைப்ரரியில் உள்ள ஆனந்தகிரி சங்கர விஜயத்தின் சுவடி ஒன்றில் முதல் அத்யாயத்திலேயே அந்த புஸ்தகத்தில் தான் சொல்லப்போகும் விஷயங்களைக் கூறும்போது "பகவத்பாதர்கள் ஆகாசமார்கமாக கைலாஸம் சென்ற விஷயம் பற்றி......இப்புஸ்தகத்தில் கூறுகின்றேன்'; என்று ஆனந்தகிரி வாக்யம் காணப்படுகின்றது. ஆனந்தகிரி சங்கர விஜயத்தின் Manuscript Copy கள் தாரகா மட லைப்ராரியிலும் சென்னை அரசாங்க Manuscript லைப்ராரியிலும் உள்ளன. அதில் 55ம் ப்ரகரணத்தில் பகவத்பாதர்கள் கைலாஸத்தில் பரமேச்வரனை தர்சனம் செய்தார் என்றும், அவரிடம் பரமேச்வரன் ஐந்து ஸ்படிக லிங்கங்களை அளித்தார் என்றும் கூறி விட்டு, அந்த ஐந்தில் வரலிங்கத்தை நீலகண்ட க்ஷேத்ரத்தில் ப்ரதிஷ்டை செய்தார் என்றும், முக்திலிங்கத்தை கேதார க்ஷேத்ரத்தில் ப்ரதிஷ்டை செய்தார் என்றும் கூறுகிறார். ஆனந்தகிரி. பின்பு 63-ம் ப்ரகரணத்தில் ச்ருங்ககிரிக்கு சமீபத்தில் துங்கபத்ரா நதி தீரத்தில் ஒரு மடத்தை ஸ்தாபித்து அதில் போக லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்தார்'' என்று கூறுகிறார்.

பிறகு 65-வது ப்ரகரணத்தில் காஞ்சியில் காமகோடி பீடத்தை ஸ்தாபித்து,

அங்கு தன் அத்வைத ஸித்தாந்தத்தை உலகில் பரப்புவதற்காகத் தன்னுடைய சிஷ்யரான ஸுரேச்வரரை "யோகலிங்கத்தை பூஜித்துக் கொண்டு நீ காம கோடி பீடத்தில் இரு என்று பகவத் பாதர்கள் கூறினார்கள்" என்று ஆனந்த கிரி கூறுகிறார்.

பின் 74-வது ப்ரகரணத்தில் காஞ்சியில் ஸ்ரீ பகவத் பாதர்கள் ஸித்தி அடையும் முன்பு ஸுரேச்வராசார்யரை "மோக்ஷலிங்கத்தை சிதம்பர க்ஷேத்ரத்திற்கு அனுப்புமாறு கூறினார்கள்" என்று ஆனந்தகிரி கூறுகின்றார்.

சிவரஹஸ்யத்தில் பகவத்பாதர்கள் ஐந்து லிங்கங்களைப் பெற்று கொண்ட விவரம் மாத்திரம் உள்ளது. அவற்றை எங்கெங்கு ஸ்தாபித்தார்கள் என்ற விவரம் ஆனந்தகிரி சங்கர விஜயத்தில் கூறப்பட்டுள்ளது.

இவ்விதம் உலகில் உள்ள ஜீவராசிகள் எல்லோரும் ஆத்ம ஞானத்தை அடைய வேண்டும் என்ற உன்னதமான எண்ணத்துடன் சிவலிங்கங்களை ப்ரதிஷ்டை செய்து, ஆத்ம ஞானத்தை உலகில் பரப்ப பகவத்பாதர்கள் பாரததேசத்தில் பல இடங்களில் மடங்களை ஸ்தாபித்தார்கள். தான் கடைசியில் காஞ்சீபுரத்திலேயே காமகோடி பீடத்தில் இருந்து கொண்டு அங்கேயே ஸித்தியடைந்தார்கள். காமகோடி பீடத்திற்கு பீட சக்தி காமாக்ஷீதேவி. பீட தேவதை ஆதிவராஹர். பீட க்ஷேத்ரம் ராமேச்வரம். இப்பீடத்தை அலங்கரித்த ஸ்ரீபகவத்பாதர்கள் ஜீவன் முக்தர்கள். ப்ரம்மஸூத்ர பாஷ்யத்தில் ஓரிடத்தில் பகவத்பாதர்கள் ஒருவனுக்கு சரீரத்தில் இருந்து கொண்டிருக்கும் போதே தான் ப்ரமத்தைத் தவிர வேறல்லாதவன் என்ற த்ருடமான ஞானமிருந்தால், அதை மற்றவன் எவ்வாறு மறுக்க முடியும்" என்று கூறுகின்றார்.

இந்த பாஷ்யத்திற்கு விரிவுரை எழுதும் போது கோவிந்தாநந்தர் தன் ரத்நப்ரபா என்ற உரையில் ஜீவன் முக்தியைக் குறித்து தன் அனுபவத்தைக் கூறுகின்றார்கள் என்று கூறுகிறார்.

ஸ்ரீ காஞ்சீ காம கோடி பீடத்தை அலங்கரித்த ஜீவன் முக்தர்களான ஸ்ரீ பகவத்பாதர்கள் ஸுரேச்வராசார்யாரின் மேற்பார்வையில் ஸம்க்ஷேபசாரீரகம் என்ற உயர்ந்த க்ரந்தத்தை இயற்றிய ஸர்வஞாத்மமுனி அவர்களை பீடாதிபதியாக நியமித்தார்கள்.

ஸுரேச்வராசார்யரும் ஒரு ஜீவன் முக்தர். தான் இயற்றிய ப்ருஹதாரண்யக-உபநிஷத் பாஷ்ய வார்த்திகத்தில் அவர்கள் "ஆத்மா நிர்குணமான வஸ்து என்று மூன்று தடவை சபதம் செய்கிறேன்" என்று கூறுகிறார்கள். இவ்வாறு கூறுவதற்கு அவருடைய அனுபவமே ப்ரமாணம்.

ஸர்வஞாத்ம முனியும் ஜீவன் முக்தரே. 'ஸம்க்ஷேபசாரீரகம்' என்ற தன்னுடைய க்ரந்தத்தில் "ஜீவன் முக்தி என்பது உண்டு ஏனெனில் எனக்கு அந்த அனுபவம் இருக்கிறது. த்வைதப்ரபஞ்சத்தின் சாயையும் இருக்கின்றது. இதை ரக்ஷிப்பதற்காக ஆத்ம ஞானத்தினால் அழிக்கப்பட்ட அவித்யையின் ஸம்ஸ்காரம் இருக்கிறது. இந்த விஷயங்களைக் குறித்து என் அனுபவமே ப்ரமாணம்" எனக் கூறுகிறார்,

இவ்விதம் பகவத் பாதர்களால் ஸ்தாபிக்கப்பட்டு, பகவத்பாதர்கள் போன்ற ஜீவன் முக்தர்களால் அலங்கரிக்கப்பட்ட புனிதம் வாய்ந்த ஸ்ரீ காமகோடி பீடத்தை 68-வது பீடாதிபதியாக நமது பெரியவர்கள் ஸ்ரீ பகவத்பாதர்களின் மறு அவதாரம் அலங்கரித்து வருகின்றார்கள். நமது பெரியவர்கள் ஜீவன் முக்தர்கள். ஸ்திதப்ரக்ஞன், குணாதீதன், விஷ்ணு பக்தன், ஜீவன் முக்தன் என்று ஆத்ம ஞானியை பலவாறாகக் குறிப்பிட்டு லக்ஷணங்கள் சொல்லி உபநிஷத்துகள், கீதை, யோக வாஸிஷ்டம் ஆகிய க்ரந்தங்கள் விளக்குகின்றன. அந்த லக்ஷணங்

கள் யாவும் நமது பெரியவர்களிடம் ஸமன்வயத்தை அடைகின்றன. ஆத்ம ஞானத்தை அடைய சாஸ்திரங்களில் சொல்லிய அவ்வளவு மார்க்கங்களும் நமது பெரியவர்களிடம் நம்மை சேர்ப்பி த்து அவர்களின் அனுக்ரஹம் மூலம் ஆத்ம ஞானத்தைக் கொடுக்கின்றன. நமது பெரியவர்களிடம் மனதைச் செலு த்தி அவர்களுக்கே நாம் செய்யும் வர்ண ச்ரம தர்மங்களை ஸமர்ப்பிக்க அவர் களின் அனுக்ரஹத்தினால் நமக்கு ஆத்ம ஞானம் ஸித்திக்கிறது. அடைய வேண் டியது என்று ஒன்று இருந்து அடைய நமது பெரியவர்கள் ஜன்மா எடுக்கவோ, கர்மா செய்யவோ இல்லை. ஏனெனில் அவர்கள் ஈச்வரனே. அவர்கள் பிறந்த தும் கர்மா செய்வதும் உலக அனுக்ர ஹத்திற்காகத்தான். ஈச்வரனிடமும், குருவினிடமும் அளவில்லாத பக்தி கொண்டுள்ள ஒருவனுக்கு உபதேசிக் கப்பட்ட வேதாந்த மஹா வாக்யங்கள் உடன் ஆத்மானுபவத்தைக் கொடுக்கும். ஈச்வரனே நமக்கு குருவாக நமது பெரிய வர்கள் உருவத்தில் அவதரித்துள்ள தால் நமக்கு ஒரே இடத்தில் பக்தி செய் தால் போதும். இது நாம் பல ஜன்மாக் களில் செய்த புண்ணியங்களின் பலன்.

ஈச்வரனை உபாஸித்து அதனால் வசீ கரிக்கப்பட்ட மனதினால், குணமற்றதும், க்ரியையற்றதுமான ஓர் ஜ்யோதி ஸ்வரூ பத்தை யோகிகள் அனுபவிக்கிறார்கள். அவர்கள் அவ்விதமான அனுபவத்தில் இருக்கட்டும். நமக்கோவெனில், சாந்த மான ஓர் உருவத்தை எடுத்துக்கொண்டு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தை தற் போது அலங்கரித்துக்கொண்டு வரும் அதே ஜ்யோதி ஸ்வரூபமானது வெகு காலத்திற்கு நமக்கு நேத்ரானந்தத்தை அளித்துக்கொண்டும், பரம பவித்ரமான எண்ணங்கள் நமக்கு உண்டாக அனுக்ர ஹித்துக் கொண்டும் நம்மை ஆத்மீக மார்க்கத்தில் அழைத்துச் செல்லட்டும்.

அவித்யை என்ற மஹா மோஹத்தை உடனேயே அழிக்கும் சக்தி வாய்ந்ததும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தை தற் போது அலங்கரிக்கும் ஞான ஸ்வரூபத் தை நான் நமஸ்கரிக்கின்றேன்.




விழுப்புரத்தில் ஸ்ரீ பெரியவாள் ஜயந்தி விழா வீதி ஊர்வலம்.

ஜய ஜய சங்கர ஹர ஹர சங்கர

நகுரோ ரதிகம் ஜ்ஞாநம் நகுரோ ரதிகம் தப: |
நகுரோ ரதிகம் த்யாநம் நாஸ்தி தத்வம் குரோ: பரம் ||



காமகோடி பீடம் வாழும் என் குரோ—ஜகத்குரோ
சரணம் சரணம் சந்த்ரசேகர குருநாதா
கருணா ஸாகர காஷாய கமண்டல குருநாதா
பரப்ரும்மஸ்ரீ பரமஹம்ஸ குருநாதா
பரமாத்ம போத பரம காருண்ய குருநாதா
கலைஞான பண்டித காமகோடிபீட குருநாதா
மலரடி சரணம் மங்கள சங்கர குருநாதா

குரு வாக்கியமே மஹா வாக்கியமே
கரம் சரண் சிரம் பெரல் மஹா பாக்கியமே

ராம ராம நமோஸ்து தே ஜய
ராமபத்ர நமோஸ்து தே
ராமசந்த்ர நமோஸ்து தே ஜய
ராகவாய நமோஸ்து தே

மனமே சங்கரரை எப்பொழுதும் நினை
சந்த்ரமௌளீசரை ஆராதிப்பவரும்
சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி என்னும்
பெயரை உடைய யதிஸ்ரேஷ்டரான சங்கரரை நினை

காமகோடி பீடத்தை அலங்கரித்துக் கொண்டு
இருக்கும் மூர்த்தியும்; காமக்ரோத லோபமோஹ
மதமாத்சர்யம் என்னும் ஆறுவர்க்கங்களை
விலக்கியவரும்; கீர்த்தியுடன் விளங்குபவரும்;
பரிசுத்தத்தின் வடிவமே உருவாக உடையவரும்;

தன்னை ஆச்ரயித்தவர்களுக்கு எல்லா இஷ்டத்தையும் கொடுக்கக் கூடியவருமான சங்கரரை எப்பொழுதும் நினை மனமே.

—கி. நாகராஜன், சென்னை - 6.

ஸதா இன் முகத்துடன் அனுக்ரஹம் செய்யும்
ஸ்ரீ புதுப் பெரியவாள்



ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்



Guru Poornima Message

of His Holiness

Jagadguru

## Sri Sankaracharya of Sri Kanchi Kamakoti Peetam

On the Guru Poornima Day, the Cowherd Krishna, the Jagatguru, the Perceptor of the Universe, is being worshipped along with Vyasa, by Sanyasins throughout the land The Cow is His Companion. Cow Protection is the sacred duty of man In India, Cows, our domestic companions, are mostly starving. Pasture lands are fastly being converted into paddy fields for the sake of raising paddy for human consumption. On the sacred Guru Pournima day, every Human Being in this land should take a vow to raise the Agasthiya plant, the staple food of the Cow in all available vacant sites, purchasing, if necessary, even a small piece of land, and providing such sites with fencing and proper care for the growth of such plants. This is the only way in which we can compensate for such conversion of pasture lands into paddy fields and this we should positively do.



## மங்களம்

சரணம் சரணம் காமகோடி
குருவின் பாத கமலமே
சார்ந்து பக்தி பண்ணுவோர்க்குச்
சகல கார்யமும் ஸபலமே.

அன்னவர்க்கும் அவரடியவர்
அனைவர்கட்கும் மங்களம்
தென்னரங்கர்க்கும் தில்லை நாதர்க்கும்
தேவிமார்கட்கும் மங்களம்.

காஞ்சிமாநகர் கச்சியப்பர்க்கும்,
காமாக்ஷித் தாய்க்கும் மங்களம்
வாஞ்சையுடைய வரதராஜர்
மலரடிக்கு மங்களம்.

மாதமும் மும்மாரி பெய்து
மண்டலங்கள் செழிக்கவே
மக்களருகா லெனக்கிளைத்து
மகிழ்ந்து வாழ்க மங்களம்.

மங்களம்! ஜெய மங்களம்!!

சுபம்!

स्वस्ति प्रजाभ्यः परिपालयन्तां न्याय्येन मार्गेण महीं महीशाः ।
गो ब्राह्मणेभ्यः शुभमस्तु नित्यं लोकाः समस्ताः सुखिनो भवन्तु ॥

ஸ்ரீ காஞ்சீ காமகோடி ஸேவா ஸமாஜம்,
மைலாப்பூர்

ஜய ஜய சங்கர !    ஹர ஹர சங்கர !



பத்மபூஷன் T. S. ராமஸ்வாமி அய்யர் (தலைவர்)

## நன்றியுரை

1. விழுப்புரத்தில் நடக்கும் ஸ்ரீ பெரியவாளின் 77-ம் வருஷ ஜயந்தி விழாவில் ஈடுபட்டு விளம்பரங்கள் (Advertisement), கட்டுரைகள் (articles) கொடுத்து உதவியவர்களுக்கும், வாழ்த்துச் செய்திகள் Messages அனுப்பியவர்களுக்கும்,
2. பிளாக்குகள் (Blocks) கொடுத்து, உதவிய B. G. Paul & Co. Sri K. நீலகண்ட அய்யர் அவர்களுக்கும்,
3. புஸ்தகம் வெளியிட அரிய யோஜனைகள் கூறிய ஸ்ரீ கி. நாகராஜனுக்கும் (B. G. Paul & Co.,)
4. அட்டை பக்கங்கள் அச்சிட்டு கொடுத்த ஸ்ரீ K. தியாகராஜன், ஸ்ரீ K. விஸ்வநாதன் (Neo Art Press) ஆத்மநாதன் (கல்கி) அவர்களுக்கும், ஸ்ரீ சடகோபன் (Trichy) அவர்களுக்கும்,
5. ஹோமங்கள் சந்தர்ப்பனைகளில் மிகவும் ஈடுபட்ட மணக்கால் ஸ்ரீ நாராயண சாஸ்திரிகளுக்கும்,
6. விழுப்புரத்திலுள்ள ஸ்ரீ மடத்தில் நல்ல காரியங்களை முன் நின்று செய்து கொடுக்கும் ஸ்ரீ சிதம்பரய்யர், பாண்டிச்சேரி ஸ்ரீ கோபாலய்யர், Dr. நரசிம்மய்யர் விழுப்புரம் மஹா ஜனங்களுக்கும், ஷ விழாவிற்கு நன்கொடைகள் அளித்தவர்களுக்கும்,
7. இந்த மலரை நன்கு அச்சிட்டுக் கொடுத்த ஸ்ரீ லக்ஷ்மி விஜயம் பிரஸ் உரிமையாளருக்கும், உதவி புரிந்த ஸ்ரீ வி. நடராஜய்யர், (Metro Politan Printers) அவர்களுக்கும்,

மற்றும் உதவிகள் புரிந்த எல்லோருக்கும் எங்களுடைய மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

குறிப்பு:—வெகு குறுகிய காலத்தில் இம்மலர் அச்சிட்டு முடிக்கப்பட்டதால், எங்கள் கவனத்தையும் மீறி ஏதாவது குற்றங்களும், பிழைகளும் இருந்தால் மன்னிக்கவும்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸேவா ஸமாஜம்.

லக்ஷ்மி-விஜயம் பிரஸ், 2, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5.